தொகுதி 57 இதழ் 3



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

அநல ௵ பங்குனி மீ

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!

—சுவாமி விவேகானந்தர்




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை 600-004

# காந்தியடிகளின் பொன்மொழிகள்




★ சோதனைக் காலங்களிலெல்லாம் கடவுள் என்னைக் காப்பாற்றியிருக்கிறார். 'கடவுள் என்னைக் காப்பாற்றினார்' என்ற வாக்கியம், என்னைப் பொறுத்த வரையிலும் இன்று ஆழ்ந்த பொருள் கொண்டதாக இருக்கிறது. ஆனால் அந்த வாக்கியத்தின் முழுப்பொருளையும் நான் இன்னும் கண்டறியவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. பரிபூரணமாக அறிய இதைவிடப் பழுத்த அனுபவம் தேவை.

★ இந்தியாவிற்கும் மனித சமூகத்திற்கும் ஊழியன் என்று என்னைச் சொல்லிக் கொள்கிறேன். இந்த ஊழியத்திலேயே சாவதற்கு நான் விரும்புகிறேன். புதிய ஒரு மதத்தை ஸ்தாபிக்க நான் விரும்பவில்லை.

★ மறு உலகத்தில் இந்துக்கள் என்றும், கிறிஸ்தவர்கள் என்றும், முஸ்லிம்கள் என்றும் கிடையாது என்பது என் நம்பிக்கை. அங்கே அவர்களுடைய உத்தியோகங்களும் விலாசங்களும் கவனிக்கப்பட மாட்டாது. அவர்களுடைய செயல்களுக்கேற்றவாறுதான் அங்கு நியாயத்தீர்ப்பு செய்யப்படும்.

★ ஒழுங்கு, தியாகபுத்தி, பணிவு, திடசித்தம் ஆகிய குணங்களை அளிப்பதில் உண்ணாவிரதத்திற்கும் பிரார்த்தனைக்கும் உள்ளதைப்போன்ற சக்தி வேறு எதற்கும் கிடையாது.

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

★ அன்பர்கள் தமது பெயர், விலாசம் முதலியவைகளைத் தெளிவாக எழுதி யனுப்பும்படி வேண்டுகிறோம்.

★ அன்பர்கள் எங்களுக்கு எழுதும் எல்லாக் கடிதங்களிலும், மணியார்டர் கூப்பன்களிலும் தங்களுடைய சந்தா எண்ணைத் தவறாமல் குறிப்பிட வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு மாதமும் பத்திரிகையைச் சுற்றி அனுப்பும் கவரிலுள்ள விலாசத்தில், தங்களுடைய சந்தா எண் இருக்கிறது. அன்பர்கள் அதைக் கவனமாகக் குறித்து வைத்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார் கள்.

★ விலாச மாற்றம் இருக்குமானால் உடனுக்குடன் எங்களுக்குத் தகவல் தெரிவியுங்கள். இல்லாவிடின் பழைய விலாசத்திற்கே பத்திரிகை சென்று கொண்டிருக்கும்.

★ தங்களுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் விலாசத்தைக் கவனமாகச் சரி பார்த்துக் குறையிருப்பின் உடனடியாகத் தெரிவியுங்கள்.

★ சில சமயங்களில் அனுப்பப்படும் பத்திரிகை எங்களுக்கே திரும்பி வந்து சேருகிறது. சில நாட்களுக்குப் பிறகு அதே சந்தா அன்பர்கள், தங் களுக்குப் பத்திரிகை வந்து சேரவில்லை என்று கடிதம் எழுதுகிறார்கள். தயவுகூர்ந்து தாங்கள் ஊரில் இல்லாத சமயங்களில் இதழைப் பெற்றுத் தங்களிடம் சேர்ப்பிக்க ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்.

★ சில அன்பர்கள் ஆங்கில மாதத்தின் ஆரம்பத்திலேயே தங்களுக்குப் பத்திரிகை வந்து சேரவில்லை என்று கேட்டுக் கடிதம் எழுதுகிறார்கள். ஆங்கில மாதம் 15 தேதிக்குப் பிறகே பத்திரிகை அனுப்பப்படுகிறது. ஆகவே 25 தேதி வரையிலும் தங்களுக்குப் பத்திரிகை வந்து சேரா விட்டால் எங்களுக்குக் கடிதம் எழுதலாம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தா தாரராகச் சேர்ந்து விடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர் சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போல சந்தாவைச் செலுத் தலாம்.

★ சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாவைப் புதுப்பித்துக் கொள்வதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தெய்வத் தொண்டாகும். சந்தாதாரர்கள் இந்த வேண்டுகோளைத் தங் களுக்கு ஏதோ 'சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்து விடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத்தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒருசிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகி றோம். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தில் சூழ்நிலையில் நல்ல கருத்துக் கள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

★ சந்தா எண் குறிப்பிடாமல்வரும் கடிதங்களைக் கவனித்து ஆவன செய் வதற்கு நீண்ட தாமதமும் பல சிரமங்களும் ஏற்படுகின்றன. ஆகவே **அன்பர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும், சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுதும்படி** மீண்டும் மீண்டும் கேட்டுக்கொள்கிறோம்.

நிர்வாகி

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | அநல ஞு பங்குனி மீ | இதழ் 3 |
| --- | --- | --- |

## பொருளடக்கம்

பக்கம்



1. பிரார்த்தனே ... 65
2. ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு ... 66
3. வாழ்வின் பயனும் அவதாரமும்—ஆசிரியர் ... 67
4. திருக்கோல உண்மை—கி. வா. ஜகந்நாதன் ... 72
5. ஆன்மிக உரையாடல்—சுவாமி துரியானந்தர் ... 75
6. துருவாசர் வந்தார்—நா. பார்த்தசாரதி ... 77
7. சிறுவர் பகுதி: மதமே எனக்குத் தாயாகும்—நாக முத்தையா ... 80
8. ஸ்ரீ ராமக்ருஷ்ணகர்ணும்ருதம்—'அண்ணு' என். சுப்ரமண்யம் ... 81
9. சக்தியும் சிவமும்—அருட்பா அரசு கிரிதாரி பிரசாத் ... 83
10. சின்மயி அன்னே—கோமதி ராஜாங்கம் ... 84
11. சுவாமி விவேகானந்தரின் கடிதங்கள்—தமிழாக்கம்: சுவாமி கருணனந்தர் ... 87
12. ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கமும் வ. உ.சியும்—பெ. சு. மணி ... 90
13. பரமார்த்தப் பிரசங்கம்—சுவாமி விரஜானந்தர் ... 93
14. திருமணத்தின் புனித சடங்குகள்—நல். முருகேச முதலியார் ... 95
15. செய்தி ... 96





# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

தொகுதி 57 | அநல ஷு பங்குனி மீ | இதழ் 3


## பிரார்த்தனை

मत्समः पातकी नास्ति पापघ्नी त्वत्समा न हि ।
एवं ज्ञात्वा महादेवि यथा योग्यं तथा कुरु ॥ —श्री शंकराचार्य

மத்ஸம: பாதகீ நாஸ்தி பாபக்னீ த்வத்ஸமா ந ஹி |
ஏவம் ஜ்ஞாத்வா மஹாதேவி யதா யோக்யம் ததா குரு ||

*உலகில் எங்கும் என்னைப்போலப் பாவம் செய்தவருமில்லை; உன்னைப்போலப் பாவத்தைப் போக்கும் சக்தியும் இல்லை. தேவி! இதை எண்ணிப் பார்த்து உனது விருப்பம்போல செய்.*

—ஸ்ரீ சங்கராச்சார்யர்

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்
பெருமை பெறு நினதுபுகழ் பேசவேண்டும் பொய்மை
பேசா திருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும் மதமானபேய்
பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண்ணாசையை மறக்கவே வேண்டும் உனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில்நான் வாழ வேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

—வடலூர் வள்ளலார்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

கண்டுபிடிக்கப்பட்டதும் திருடன் ஓடிப்போய்விடுகிறுன். அதைப்போலவே மாயையின் சுபாவம் இன்னதென்று நீ ஆராய்ந்து கண்டுபிடித்துவிட்டால், உன்னை விட்டு அது ஓடிப்போய் விடும்.

பூனையானது தனது குட்டிகளைப் பற்களால் பிடிக்கிறது. ஆனுல் அதன் காரணமாக அந்தப் பூனைக்குட்டிகளுக்குத் தீங்கு உண்டாவதில்லை. ஆனுல் அதேவிதத்தில் பூனை ஒரு எலியைப் பிடிக்கும்போது, அந்த எலி உடனே இறந்துபோகிறது. அதைப்போலவே மாயையானது மற்ற வர்களை அழிக்கக்கூடியதாக இருந்தாலும், பக்தனை ஒருபோதும் துன்புறுத்தாது.

மாயை என்பது எது? ஆன்மிக முன்னேற்றத்திற்கு இடையூருக இருக்கும் காமம்தான் மாயை.

சூளையில் வேக வைப்பதற்கு முன்பு மண்பாண்டம் உடைந்தால், அந்த மண்ணையே உபயோகித்துக் குயவன் வேறு ஒரு புதிய மண்பாண்டம் செய்கிறுன். ஆனுல், சூளையில் வெந்த மண்பாண்டம் உடைந்தாலோ, அதன் துண்டுகளைக்கொண்டு, பிறகு அவனுல் புதிய மண்பாண்டம் செய்ய முடியாது. அதைப்போல ஆத்மஞானம் அடையப்பெருத அஞ்ஞான நிலையில் ஒருவன் மரணம் அடைந்தால், மீண்டும் அவன் பிறவி எடுக்கிறுன். ஆனுல் உண்மை ஞானமாகிய நெருப் பால் வெந்த பிறகு ஒருவன் பரிபூரண ஞானியின் நிலையில் இறந்துபோனுல், அவனுக்கு மறு பிறவி கிடையாது.

வேகவைத்த நெல்லை பூமியில் விதைத்தால் மீண்டும் அது முளைக்காது. வேக வைக்காத நெல்தான் முளைவிடும். அதைப்போல பரிபூரண ஞானநிலையைப் பெற்று, சித்தனுன பிறகு ஒருவன் இறந்துபோனுல், அவன் மீண்டும் பிறவி எடுக்கமாட்டான். ஆனுல் சித்தனுகாத ஒருவன், தான் பரிபூரண ஞான நிலையை அடையும் வரையிலும் திரும்பத் திரும்ப ஏராளமான பிறவிகளை எடுக்க வேண்டியிருக்கும்.

தராசுத் தட்டில் எந்தப் பக்கம் கனமாக இருக்கிறதோ, அந்தப் பக்கத்தில் தராசு முள் ளானது மையத்தை விட்டுச் சாய்ந்து விலகி இருக்கும். அதைப்போல, பெண் பொன் ஆசைகளால் கனத்த மனம் ஈசுவரனை விட்டு விலகித் தடுமாறுகிறது.

பெண்ணுசையும் பொன்னுசையும் மனதைவிட்டு அகலும்போது ஆத்மாவிடம் வேறு என்ன தங்கியிருக்கும்? பிரம்மானந்தமே அங்கு குடிகொண்டிருக்கும்.

விஷப் பாம்புகள் நடமாடும் வீட்டில் வசிப்பவர்கள் எப்போதும் மிக ஜாக்கிரதையுடன் இருப்பதைப்போல், உலகில் வாழும் மக்கள், காமத்திற்கும் பண ஆசைக்கும் உட்படாமல் எப் போதும் மிகமிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

கடவுள் எங்கும் நிறைந்திருப்பவரானுல், அவரை ஏன் நம்மால் பார்க்க முடியவில்லை? பாசியும் நாணலும் மிகுந்து கனமாக மூடி மறைத்துள்ள குளத்தின் கரையில் நின்று நீ பார்த் தால், அந்தக் குளத்தில் தண்ணீர் இருப்பதே உனது கண்ணுக்குப் புலப்படாது. உனக்குத் தண்ணீரைப் பார்க்கவேண்டும் என்ற விருப்பம் இருந்தால், குளத்தின் மேல்பரப்பிலிருந்து பாசி யையும் நாணலையும் அகற்றவேண்டும். மாயையாகிய திரையால் மூடப்பட்ட கண்களை உடைய நீ, கடவுளை ஏன் பார்க்க முடியவில்லை என்று குறை கூறுகிருய்? உனக்கு அவரைப் பார்க்கும் விருப்பம் இருந்தால், உனது கண்களிலிருந்து மாயையாகிய திரையை அகற்று.

ஓம்



# விஜயதீபம்

## வாழ்வின் பயனும் அவதாரமும்

### சத்திய வாக்கு

ஏழைகளுக்காக நெஞ்சின் ரத்தத்தைச் சிந்துபவரையே நான் மகாத்மா என்பேன். அவ்விதம் இல்லாதவர் துராத்மாக்களே ஆவர்.

பலருடைய நன்மைக்காகத் தன் உயிரைப் பரித்தியாகம் செய்ய வேண்டும். இதுதான் வேதாந்தத்தின் சாரம்.

இந்த வாழ்வு சுருங்கியது; இந்த உலகப் பெருமைகள் நிலையற்றவை. ஆனல், பிறருக்கென வாழ்வாரே வாழ்வார்.

Vivekananda

(சுவாமி விவேகானந்தா)

உலக வாழ்க்கையில், இன்பத்தையும் துன்பத்தையும் நாம் பார்த்து வருகிறோம். இயல்பாகவே ஒவ்வொருவரிடமும் இன்பத்தை விரும்பி ஏற்கும் பண்பும், துன்பத்தை வெறுத்துத் தவிர்த்துவிடும் பண்பும் குடிகொண்டுள்ளன.

மனிதர்களிடையே எத்தனை எத்தனையோ மனப்போக்குகள், சிந்தனைகள் கொண்டவர்கள் இருக்கிறார்கள். உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்று கணக்கில் அடங்காத பல வேறுபாடுகளும் அவர்களிடையே காணப்படுகின்றன. ஆனல், மனிதன் என்று யாரை எடுத்து ஆராய்ந்து பார்த்தாலும், அவனது நினைவுகள், சொற்கள், செயல்கள் ஆகியவைகளுக்கு எது ஆதாரமாக இருந்து அவனை இழுத்துச்செல்கிறது என்று நுட்பமாக ஆராய்ந்தால், இறுதியில் நமக்குக் கிடைக்கும் ஒரே விடை, துன்பத்தை ஒழிப்பது, இன்பத்தைப் பெறுவது என்பதாகத்தான் இருக்கும். இந்த ஒன்றே காலமெல்லாம் மனித சமுதாயத்தின் சிந்தனைப் போக்குகள் அனைத்திற்கும் வேராக இருந்து வந்திருக்கிறது. இன்பத்தை எப்படியாவது அடையவேண்டும் என்ற முயற்சியைத்தான் நாம் வாழ்க்கை என்கிறோம்.

இந்த முயற்சியில் மனித குலம் மட்டுமின்றி, உலகில் உயிர்பெற்று வாழ்ந்து வருகிற எல்லா ஜீவராசிகளும், அறிந்தோ அறியாமலோ ஈடுபட்டிருக்கின்றன. கணக்கற்ற உயிர்க்கூட்டங்கள் நிறைந்துள்ள இவ்வுலகில் எங்குத் திரும்பினாலும், எப்போது திரும்பினாலும், எந்த ஜீவராசியானாலும் இன்பத்தை நாடுகிற முயற்சியில் ஈடுபட்டிருப்பதைப் பார்க்கலாம். மனிதனைத் தவிர்த்த ஏனைய உயிர்களுக்குப் பகுத்தறிவு கிடையாது. எனவே அவைகள் காரணகாரிய

முறைகளை ஆராயாமலேயே, தம்மிடமுள்ள இயற்கையான அறிவாற்றலைக் கொண்டும், பழக்க வழக்கங்களைக் கொண்டும் தத்தம் பிறப்பிற்கு ஏற்ற தொழில் வகைகளைச் செய்து கொண்டிருக்கின்றன. அதன்மூலம் அவைகள் இன்பத்தை நோக்கி உந்தப்பெற்று, மெல்ல மெல்ல நகர்ந்து முன்னேறுகின்றன.

ஆனால் ஆறறிவு பெற்றுள்ள மக்கள் நிலை வேறு. இன்ப துன்பங்களையும், அவற்றின் பலாபலன்களையும், தங்களின் பகுத்தறிவின் துணையைக் கொண்டு நன்கு ஆராய்ந்து, தீமையை விலக்கவும் நன்மையைக் கடைப்பிடிக்கவும் வல்ல தனிப்பெரும் திறமை அவர்களிடம் இருக்கிறது. இதனால்தான் மனிதப்பிறவி மேலானது. 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்பது பெரியவர்கள் அனைவரும் ஒப்புக் கொண்டுள்ள உண்மை.

மனிதன் இன்பத்தைப் பெற விரும்புகிறான். அதன்பொருட்டுப் பகுத்தறிவின் துணையைக் கொண்டு, பல செயல்களில் தன்னை ஈடுபடுத்துகிறான். ஆனால் அறியாமையில் உள்ள சாதாரண மனிதன், தான் இன்பம் என்று நினைத்தவைகள் பெருந்துன்பங்களைத் தருவதையும், ஆரம்பத்தில் துன்பம் தரும் என்று அஞ்சி விலக்கியவைகளே முடிவில் இன்பம் தருவதாக அமைந்துவிடுவதையும் பார்க்கிறான். இந்த அனுபவம் வரவர அவனது திகைப்பு அதிகமாகிறது. முதலில் இன்பதுன்பங்களை விளைவிக்கிற காரணங்கள் அவனுக்குப் புரிவதில்லை. நாளடைவில் கூர்ந்து ஆராயும்போதும், தனக்கும் மற்றவர்களுக்கும் வாய்த்த அனுபவங்களைக் குறித்து மீண்டும் மீண்டும் சிந்திக்கும் போதும், இன்பதுன்பங்களை விளைவிக்கும் காரணங்களைப் பற்றிய உண்மையான அறிவு மெல்ல மெல்ல அவனுக்கு உதயமாகிறது. தன்னுடைய பரிபக்குவ நிலைக்கு ஏற்றவகையில், மனிதனின் மனம் உலகப்பொருள்களை இன்பமாகவும் துன்பமாகவும் கிரகிக்கிறது. உலகம் நிலையற்றது. உலகப்பொருள்கள் நிலையற்றன. நிலையற்ற பொருள்கள் தரும் இன்பங்களும் நிலையற்றன. ஆனால் இந்த உண்மை, எத்தனை எத்தனையோ இன்னல்களுக்கு ஆளானாலும், இடர்ப்பாடுகளுக்கிடையே கதறிப் பெருமூச்சு விட்டாலும், பாமர மனிதனின் உள்ளத்தில் எளிதில் பதிவதில்லை. அபூர்வமாக ஒருவேளை இந்த உண்மை அவனுக்குத் தப்பித்தவறிப் புலப்பட்டாலும்கூட, உடனடியாகத் திடீரென்று தனது இயல்புகளை அவனால் திருத்திக் கொள்ளவும் முடிவதில்லை. என்றாலும் தனது அனுபவங்களைத் தொடர்ந்து கண்முன் இருத்தி, தான் கண்டறிந்த உண்மைகளுக்கு ஏற்றவகையில் வாழ்ந்து, 'நிலையான இன்பம் எது? அதை அடைவதுதான் எப்படி?' என்பதைப்பற்றி மேலும் மேலும் அவன் ஆராய்ந்து சிந்தித்துத் தனது வாழ்க்கையை உயர்த்தி வந்தால், முடிவில் மிகப்பெரிய உண்மைகளை அவன் கண்டடைவது உறுதி.

இவ்விதம் அயராது பாடுபட்டு, வாழ்க்கை முழுவதிலும் நிலையான இன்பத்தைத் தேடிய, வணக்கத்திற்குரிய இந்திய மகரிஷிகள் சில பேருண்மைகளைக் கண்டறிந்து முடிந்த முடிபுகளாக வெளியிட்டிருக்கிறார்கள். அவை வருமாறு:—

அழியும் தன்மை உடைய உலகப்பொருள்களிடையே அழியாத தன்மை வாய்ந்த ஒன்று எப்போதும் இருந்து வருகிறது. ஆனால், ஞானக் கண்களுக்குப் புலனாகும் அது, ஊனக்கண்களுக்குப் புலனாவதில்லை. அந்தப் பரம்பொருள் என்றென்றைக்கும் மெய்ப்பொருளாகவும், அறிவு மயமாகவும், இன்பமாகவும் விளங்குகிறது. அந்தச் சச்சிதானந்தத்தை உணர்ந்து அனுபவிப்பவர்கள் ஆனந்தக் கடலில் திளைக்கிறார்கள். அந்த ஆனந்தம் அழியாத பொருளை ஒட்டியது. எனவே, அது ஒரு சிறிதும் துன்பக் கலப்பில்லாத இன்பமாகவும் குறைவுபடாத பூரண ஆனந்தமாகவும் நிறைந்து விளங்குகிறது. வாழ்நாளில் ஒரேஒருமுறை அதைச் சுவைத்துவிட்டவனை என்றும் எப்போதும் எந்தத் துன்பமும் பாதிப்பதில்லை. அத்தகையவன் என்றென்றைக்கும் பேரானந்தப்பெருக்கில் மூழ்கித் திளைக்கிறான். அழியாத நிலையைப் பெற்ற அமரனாகி விடுகிறான். அதன் பிறகு அவனுக்குப் போக்கு வரத்து என்ற பிறப்பு இறப்பு இல்லை. எல்லா விதமான கட்டுகளிலிருந்தும் அவன் முற்றும் விடுபடுகிறான். இதுவே முக்திநிலை என்பது. இதை அடைவது ஒன்றேதான் வாழ்க்கையின் ஒரே இலட்சியம். இந்த உயர்ந்த லட்சியத்தை அடையும் நெறியில் செல்பவர்கள், முடிவிடத்தைச் சேர்ந்த பிறகு இவ்வுலகத்திற்கு மீண்டும் திரும்பி வருவதில்லை. மீளுதல் இல்லாத அந்நெறி, 'மீளாநெறி' 'மற்றீண்டு வாராநெறி' 'முக்தி நெறி' என்றெல்லாம் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

நமது நாட்டில் அந்த மேலான நெறியில் சென்று பேரின்பத்தில் மூழ்கிய பெரியோர்க ளாகிய பல தீரர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களுள் சிலர், தாம் மட்டும் இன்பத்தைச் சுவைப்பதோடு நின்றுவிடாமல், தாம் பெற்ற இன்பத்தை வையக மக்களும் பெறவேண்டும் என்ற உயர்ந்த சிந்தை கொண்டவர்கள். அந்த நல்ல ஆசையால் உந்தப்பெற்று, பெருங் கருணை பொங்க உலகத்து மக்களை அவர்கள் கூவிக்கூவி அழைக்கிறார்கள். பரமானந்தமாகிய பெரிய பயனை அடைய அவர்களுக்கு உரிய நெறியைக் காட்டி ஊக்குவிக்கிறார்கள்.

அப்படி அவர்கள் காட்டும் பாதை ஒரே மாதிரியாக இல்லாமல் காலம், இடம், பெறு பவர்களின் தகுதிகள் ஆகிய காரணங்களை முன் னிட்டு வேறுபடுவது உண்டு. பரம்பொருளும் அதை அடையவேண்டும் என்ற லட்சியமும் அனைவருக்கும் ஒன்றுதான். ஆனால் முக்தியும் பரமானந்தமும் அனைவருக்கும் ஒன்றாக இருந் தாலும், அந்தப் பரம்பொருளை அடையும் பாதைகள் காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம், நிகழ்ச்சிகளுக்கு நிகழ்ச்சி, அடிப்படைக் கருத்து மாறாமல் வேறுபட வேண்டிய அவசி யம் நேர்ந்துவிடுகிறது. உலக மக்களின் சுபா வங்கள் ஒரேமாதிரியாக இல்லாமல் வேறுபடு வதுதான் இதற்குக் காரணம்.

உதாரணமாக, ஒரு காலத்தில் ஒருவருக்கு ஓர் ஊரில் ஒரு சந்தர்ப்பத்தில் நன்மையைத் தரக்கூடியது, வேறொருவருக்கு வேறு ஓர்ஊரில், வேறு ஒரு சந்தர்ப்பத்தில் நன்மையைத் தரா மல் போகக்கூடும். எனவே நன்மை தீமைகள், நல்வழி அல்லாத வழிகள் என்பவை எல்லாம் அவரவர்களுடைய தகுதிக்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்பவே அமைகின்றன. எந்த ஒன்று, இப் போது இருக்கும் நிலையிலிருந்து மேல்நோக்கிச் செலுத்துகிறதோ அதையே ஒவ்வொருவரும் தமது தர்மமாகக் கொள்ளவேண்டும்.

ஜீவாத்மாவின் ஆன்மிகப் பயணத்தில் பரம் பொருள் தரிசனம் என்பது ஒன்றுதான் மிகவும் உயர்ந்த நிலையாகும். அடைய வேண்டிய லட்சி யமாக விளங்கும் அந்த நிலை காலம், இடம், சந்தர்ப்பம் ஆகிய வேறுபட்ட காரணங்களை முன்னிட்டு ஒரு சிறிதும் மாறுபடுவதில்லை. ஆனால் அடையப் பயன்படும் மார்க்கம் அனை வருக்கும் ஒரேவிதமாக இல்லாமல், அவரவர் களின் இயல்பிற்கு ஏற்ற வகையில் வேறுபடு கிறது. இதனால்தான் மக்களை உய்விப்பதற்காக அவதரித்த பெரியோர்கள் அடிப்படை ஆன் மிகப் பண்பை இருத்திக்கொண்டு, பல்வேறு போதனை முறைகளைக் கையாண்டிருக்கிறார்கள். மேலோட்டமாகப் பார்த்தால் இவைகள் ஒன் றுக்கொன்று முரண்படுபவைகளைப் போலத் தோன்றவும் கூடும். ஆனால் அந்தப் பெரியோர் கள் காட்டிய பாதைகள் எல்லாம், அந்த அந்தக் காலத்தில் வாழ்ந்த மக்களை உயர்த்துவதற் காகக் கடைப்பிடிக்கப்பட்டவைகளே என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

ஒருமுறை பாண்டவர்களில் மூத்தவராகிய தர்மபுத்திரரை நோக்கி அசரீரி கேள்வி கேட் டது. 'மார்க்கம் எது?' என்பது அந்தக்கேள்வி. தர்மபுத்திரர் நுட்பமாகப் பதில் சொன்னார். சாரமே அவருடைய பதிலில் வடித்தெடுத்துத் தரப்பட்டிருக்கிறது என்று சொல்லவேண்டும். 'தர்க்கத்தைக்கொண்டு அதை முடிவு செய்து விட முடியாது. வேதங்கள் அவற்றைப் பலவித மாகச் சொல்கின்றன. மகரிஷிகளும் இதைப் பற்றி ஒருவருக்கொருவர் மாறுபாடான அபிப் பிராயம் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் (மெய்யறிவும் ஒழுக்கமும் சித்திக்கப்பெற்ற) மகான்கள் எந்த வழியில் செல்கிறார்களோ, அதையே மார்க்கம் என்று கொள்ளவேண்டும்.'

மக்கள் அஞ்ஞானத்தினால் உலக ஆசைகளுக் குப் பலியாகிறார்கள். பந்தத்தில் சிக்கி உழல் கிறார்கள். இவர்களிடையே எத்தனை எத்தனை யோ வேறுபாடுகள் இருக்கின்றன. அதைப் போலவே உலக விவகாரங்களைப் பொறுத்த மட்டில் பரம்பொருளைச் சாட்சாத்கரித்த மகான்களுக்குள்ளும் சில வேறுபாடுகள் இருக் கின்றன. பொதுவாக மூன்றுவகையான வேறு பாடுகளை அவர்களிடம் பார்க்கிறோம். உதா ரணம் ஒன்றின் மூலம் இந்த உண்மை விளக்கப் பட்டிருக்கிறது.

ஒரு செம்படவன் மீன்களைப் பிடிக்க வலை வீசுகிறான். பல மீன்கள் அதில் சிக்குகின்றன. மீனவனால் அவைகள் வலையிலிருந்து வெளியே கொண்டுவரப்பட்டு உயிரை விடுகின்றன. இதைப்போலவே, பல ஜீவர்கள் மாயையாகிய வலையில் சிக்கி, முடிவில்லாமல் எண்ணற்ற பல பிறப்புக்களுக்கு ஆளாகிறார்கள். பிறந்தும், செத்தும், ஊசலாடியபடியே உழன்று பந்த

மாகிய கட்டு நீங்கப்பெருதவர்களாக இருக்கிருர்கள்.

ஆனுல் சில மீன்கள் செம்படவனின் வலேயில் விழாமல் தப்பிவிடுகின்றன. மற்றும் சில மீன்கள் வலேயில் சிக்கிய பிறகு, தமது அபாய கரமான நிலேயை உணர்கின்றன. பின்பு பெரு முயற்சி செய்து துள்ளிக்குதித்து நீரில் விழுந்து தப்புகின்றன. இப்படிச் சில மக்கள் உலக வாழ்க்கையின் நடுவில் எப்போதும் மாயையில் அகப்படாமல் வாழ்கிருர்கள். மற்றும் சிலர் மாயையினுல் அழுத்தப்பட்டிருப்பதை உணர்ந்தவுடன் கடுமையாக உழைக்கிருர்கள். முடிவில் கட்டிலிருந்து அவர்கள் தம்மை விடுவித்துக்கொண்டு முக்தி பெறுகிருர்கள். முதலாவது தரத்தைச் சேர்ந்தவர்கள் நித்தியர்கள் அல்லது நித்திய சித்தர்கள் எனப்படுகிருர்கள். இரண்டாவது தரத்தைச் சேர்ந்தவர்கள் முக்தர்கள் என்று அழைக்கப்படுகிருர்கள்.

நித்தியர்கள் வலேக்குள்ளே இருந்தாலும் வேண்டியபோதெல்லாம் அவர்களால் வலேக் கண்கள் வழியாக எளிதாக உள்ளே நுழைய முடியும். வெளியே வந்துவிடவும் முடியும். இந்த நித்தியர்கள் காட்டிய வழியைச் சில ஜீவர்கள் தங்கள் வாழ்க்கையிலும் பின்பற்றுகிருர்கள். வருந்தி மிக முயற்சி செய்யும் அவர்கள் வலேயிலிருந்து விடுபட்டு முக்தர்கள் ஆகிருர்கள்.

**வ**லேவீசி மீன் பிடிக்கும் காலங்களில் எல்லாம் அதில் சிக்கிய மீன்களில் ஒன்றைப் பல மீனவர்கள் தண்ணீரிலேயே விட்டுவிடுவார்கள். இந்த மரபு இவ்வுலகில் வாழும் பல மீனவர்களிடையே காணப்படுகிறது. அப்படியிருக்கும் போது கருணேக் கடலான ஆண்டவன் மாயை வலேயில் சிக்கித் துன்புறும் உயிர்களே விடுவிக்க மனம் கொள்ளாமல் இருப்பாரா? தன் எதிரிலேயே தன் குழந்தைகள் பல, சிறப்பாக நல்ல நிலேயில் வாழ்ந்தாலும்கூட, வீடுதுறந்து தேசாந்தரம் சென்று பரிதவிக்கும் தன் ஒரு மகனே நினேத்து ஏங்கி வருந்துவதல்லவா தாயின் இயல்பு? சாதாரண ஒரு தாயின் நிலேயே இப்படி என்ருல், ஆயிரமாயிரம் தாய்களேவிடவும் உயிர்களிடம் மிகமிகப் பெருமளவில் பரிவுடைய ஆண்டவனின் நிலே எப்படிப்பட்டதாக இருக்கும்? ஆகையால்தான் உயிர்களின் துன்பத்தை நீக்குவதற்காக ஆண்டவன், தானே வாழ்க்கையாகிய கடலில் மூழ்குகிருன். மாயை வலேயில் மனிதனுகத் தன்னேப் பிறப்பித்துக்கொள்கிருன். பிறகு அங்கு இருந்தபடியே தன்னுடைய அளப்பரிய ஆற்றலேக் கொண்டு வலேயை ஒரு பக்கமாகப் பெரிதாகக் கிழிக்கிருன். பிறகு அந்தப் பெரிய துவாரத்தின் வழியாகப் பல மீன்களேயும் தன்னுடன் அழைத்து இழுத்துக்கொண்டு வெளியே கொண்டு போய் விடுகிருன்.

**இ**வ்விதம் இறைவனே உலகில் தோன்றுவது தான் அவதாரம் என்பது. ஆகவே அவதார புருஷர்களும் நித்தியர்களும் முக்தர்களுமே மக்களே முக்தி என்ற பெருநிலேக்கு அழைத்துச்செல்லும் வழிகாட்டிகளாகத் திகழ்கிருர்கள். இந்த மூன்று பிரிவினர்களில் தங்களே மட்டுமே விடுவித்துக்கொள்ளும் திறமை உடையவர்கள் முக்தர்கள். வாழ்க்கையாகிய கடலில் மரக்கட்டைகளேப்போல மிதப்பவர்கள் என்று இவர்களேச் சொல்லலாம். நித்தியர்களோ எப்போதுமே விடுபட்டிருப்பவர்கள். மற்றவர்களுக்கும் கைகொடுத்து விடுவிக்கும் ஆற்றல் படைத்தவர்கள். தம்மை அடைந்தவர்களே அச்சத்திற்குச் சிறிதும் இடமின்றி மிதக்கச் செய்யும் தோணிகளோடு இவர்களே ஒப்பிடலாம். அவதார புருஷர்களோ ஆயிரக்கணக்கான மக்களேயும் அவர்களுடைய பாரங்களேயும் சேர்த்து ஏற்றிக்கொண்டு எளிதில் எந்தவிதமான சிரமமும் இல்லாமல் கடலேக் கிழித்துச் செல்லும் பிரம்மாண்டமான கப்பல்களேப் போன்றவர்கள். அவதாரமாகிய நீராவிக் கப்பல் வரும்போது, தாமே அதை நோக்கி நீந்திச்சென்று, சிலர் தப்பிப் பிழைத்துக்கொள்கிருர்கள். மற்றும் சிலர், தாம் இருக்கும் இடத்திற்கு அருகில் உள்ள நித்தியர்களாகிய தோணிகளேப் பற்றிக்கொண்டு அதன்மூலம் நீராவிக் கப்பலே அடைந்துவிடுகிருர்கள்.

உலக மக்களுள் ஒருவர், ஆத்ம ஞானம் அடைந்து முக்தியைப் பெறும்பொழுது உலகமாகிய கோயிலில் ஒரு 'சிறப்பு' (விசேஷ பூஜை) நடக்கும். ஆண்டவனின் தொண்டிலேயே எப்போதும் அமர்ந்து இன்புற்றிருக்கும் நித்தியர்களிலே ஒருவர் உலகில் எழுந்தருளுவாரானுல், ஒரு சிறிய திருவிழா நடைபெறும். ஆண்டவனே தனது பரிவாரங்களோடு வெகு விமரிசையாக உலகில் எழுந்தருளுவதும் உண்டு. அப்போது, அந்தக்காலம் ஊரும் உலகமுமாகச் சேர்ந்து கோலாகலமாகக் கொண்டாடி மகி

ழும் மிகமிகப் பெரிய ஒரு திருவிழாக் காலமாக இருக்கும்.

''எப்பொழுதெல்லாம் தர்மம் தளர்வடைந்து அதர்மம் எழுச்சி பெறுகிறதோ, அப்பொழுதெல்லாம் நான் என்னைப் படைத்துக் கொள்கிறேன். நல்லோரைக் காத்துத் தீயவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் யுகந்தோறும் உலகில் அவதரிப்பேன்'' என்பது கீதை வாக்கு. ஆகவே இந்த உண்மையையொட்டி அவதார புருஷர்கள் தோன்றுகிறார்கள். அவர்கள் அந்த அந்தக் காலத்தில் வாழும் மக்களின் சுபாவங்களை நன்றாக உணர்ந்து, அந்த மக்கள் பரம்பொருளின் மெய்க்காட்சியால் முக்தியைப் பெறுவதற்கான புதிய வழிகளைக் காலத்தின் இயல்புகளுக்கு ஏற்றவகையில் முடிவு செய்வார்கள். அதைப் பின்பற்றினால் மக்கள் முக்தியை அடைவது உறுதி. அதற்கு எடுத்துக்காட்டாக அவர்களே தங்கள் வாழ்க்கையை உலகிற்கு முன்மாதிரியாக வாழ்ந்தும் காட்டுவார்கள்.

நமது மதநூல்களில் அவதாரபுருஷர்களுக்கு உரிய இலக்கணங்களாகப் பின்வரும் கருத்துக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன:—

1. அவதார புருஷர்கள் இயல்பாகவே சுத்த-புத்த-முக்தர்களாகத் திகழ்கிறார்கள். பிறவிமுதற்கொண்டே மாயையின் தளைகளிலிருந்து முற்றும் விடுபட்டிருக்கிறார்கள். 2. அவர்கள் தங்களுடைய பூர்வஜன்ம நினைவுகளுடனேயே பிறக்கிறார்கள்.*

அவர்கள் உலக வாழ்க்கையின் அநித்தியத்தையும், காலம் மாறும்போது அதையொட்டி மனித சுபாவம் மாறுவதையும் உணர்ந்து, காலத்திற்கேற்ற முக்திநெறியை வகுக்கிறார்கள். தாம் வகுத்தளிக்கும் முக்திப் பாதையைக் கண்டுபிடிக்க அவர்கள் படுகின்ற அரிய பெரிய இடர்ப்பாடுகள் அனைத்தும், செய்கிற தவமுயற்சிகள் அனைத்தும், தங்களுக்காக என்று இல்லாமல் பிறர்நலன் பொருட்டே அமைந்திருக்கும். 3. தமது ஒரு பார்வையாலும் ஒரு நினைப்பாலும் ஒரு ஸ்பரிசத்தாலும் தம்மை அடைந்தவர்களை ஞானிகளாக்கும் ஆற்றல் படைத்தவர்கள். 4. முன்பின் அறிமுகம் இல்லாத நிலையிலும், ஒருவரைப் பார்த்தவுடனே கண்ணாடிப் பெட்டிக்குள் வைத்துள்ள பொருள்களைத் தெளிவாகப் பார்ப்பதைப்போல, அவர்களுடைய பூர்வஜன்ம வாசனைகளைப் புரிந்துகொள்வார்கள். அவரவர்களுக்கு ஏற்ற நெறியைக் காட்டியருள்வார்கள். 5. பிறவியிலேயே தாம் இன்ன காரியத்திற்காக உலகில் வந்திருக்கிறோம் என்பதை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். அந்தப் பெரிய பணிக்குத் தகுந்த வாழ்க்கையை வாழ்வார்கள். அவர்களுக்கு உதவியாக வேண்டிய சூழ்நிலைகள் அனைத்தும் தேவைப்படும்போது அவ்வப்போது தானாக வந்து சேரும்.

அவதார புருஷர்களிடம் மேற்கூறிய இலக்கணங்கள் எல்லாம் அமைந்திருக்கும். அவர்களால் புதிய சமயங்களை நிலைநாட்டவும் புதிய முக்திநெறிகளை வழங்கவும் இயலும்.

இந்துமத நூல்களில், இத்தகைய அவதார புருஷர்கள் அவசியம் நேரும்போதெல்லாம் தோன்றுவார்கள் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. யோக பூமியாகிய பாரத மண்ணில் வெவ்வேறு காலங்களில் தோன்றிய அவதார புருஷர்களில் இருபதுக்கும் மேற்பட்டவர்களின் வரலாறுகளை ஸ்ரீமத் பாகவதம் தெரிவிக்கிறது. மேலும் அந்த தெய்விக நூல், அவசியம் நேரும்போதெல்லாம் இனி வருங்காலத்திலும் இன்னும் பல அவதார புருஷர்கள் தோன்றுவார்கள் என்றும் உறுதி கூறுகிறது.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் மேலே குறிப்பிட்ட இலட்சணங்கள் காணப்படுகின்றன. பரம்பொருளை அடைவதற்கான வழியை அவர் காட்டியிருக்கிறார். தற்கால நவீன சூழ்நிலைகளில் வாழும் எல்லாவிதமான மக்களுக்கும் பயன்படும் இன்றியமையாத கருத்துக்களை அவர் வழங்கியிருக்கிறார் — இந்த உண்மைகளுக்கு விளக்கமாக ஸ்ரீராமகிருஷ்ண பகவானின் வாழ்வும் வாக்கும் தெளிவாக அமைந்திருக்கின்றன.

* ஸ்ரீ கிருஷ்ணர் தம்முடைய குழந்தைப் பருவத்திலிருந்தே பலவிதங்களில் தெய்விகத்தை வெளிப்படுத்திக் காட்டினார். அவரே பிறகு கீதையில், ''அர்ஜுனா! எனக்கும் உனக்கும் எத்தனையோ ஜன்மங்கள் சென்றுவிட்டன. நான் அவை எல்லாவற்றையும் அறிவேன். நீ அறியமாட்டாய்'' என்று சொல்கிறார், பகவான் புத்தர் தமது முந்திய பிறவிகள் எல்லாவற்றையும் உணர்ந்திருந்தார் என்பதை ஜாதகக் கதைகள் தெரிவிக்கின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் குறித்து விவேகானந்தர் சொல்கிறார்—''பிறந்தது முதலே அவரது செயல் விசித்திரமாக இருந்தது. அவர் பிறந்தது முதலே பழம் பிறப்புணர்ச்சியைப் பெற்றிருந்தார். தாம் இவ்வுலகில் பிறந்ததற்கான நோக்கத்தை அவர் அறிந்திருந்தார். அதை நிறைவேற்றுவதற்காகவே தமது முழு ஆற்றலையும் பயன்படுத்தினார்''.

# திருக்கோல உண்மை

கி. வா. ஜகந்நாதன்

நாம் உலகில் சில காட்சிகளைக் காண்கிறோம். முதலில் தீயனவாகத் தோன்றினாலும் ஆராய்ந்து பார்த்தால் அவை நல்லனவாக இருக்கும். மருத்துவர், அறுவை மருத்துவம் செய்யும்போது பார்க்கப் பரிதாபமாக இருக்கும். அறியாத குழந்தை மருத்துவர் நோயாளியைத் துன்புறுத்துகிறார் என்று எண்ணும். ஆனால் மருத்துவர் செயல் நன்மையையே பயப்பது. சிலர் பார்வைக்கு நல்லவர்களாக இருப்பார்கள்; ஆனால் பண்பில் கொடியவர்களாக இருப்பார்கள். சிலர் பார்ப்பதற்கு முரடர்களைப்போலத் தோன்றுவார்கள்; ஆனால் அவர்கள் நல்ல பண்புடையவர்களாக இருப்பார்கள். ஆராய்ந்து அவர்கள் இயல்பைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

என்ற குறளால் இந்தக் கருத்து வெளியாகும்.

உலகியல் காட்சிகளே இப்படியானால் முழுக்க முழுக்கக் குறியீடுகளாக விளங்கும் தெய்வங்களின் தோற்றமும் செயல்களும் நுட்பமாக ஆராய்ந்தாலன்றி உண்மை உணர முடியாதவையாக இருக்கும்.

இந்த நாட்டில் சமய சம்பந்தமான நிகழ்ச்சிகளிலும் அமைப்புக்களிலும் உள்ளுறையாகத் தத்துவம் புதைந்திருக்கும். கோவிலானாலும் மூர்த்தியானாலும், திருவிழாவானாலும், குடமுழுக்கானாலும் எல்லாவற்றுக்கும் உட்பொருள் உண்டு. அந்த உட்பொருளை உணர்ந்தால் நம்முடைய சமயக்கருத்துகளின் நேர்மை புலப்படும்.

பொதுவாக விஞ்ஞானத்தில் மேல் நிலைக்குப் போகப் போகக் குறியீடுகளே அதிகமாக இருக்கும். அவற்றின் நுட்பத்தை அறியாதவர்கள் அவற்றைக் கண்டு, எள்ளி நகையாடவும் கூடும். அறியாமையுடையவர்கள் மதித்தாலும் அவமதித்தாலும் அதைப்பற்றி அறிஞர்கள் கவலைப்பட மாட்டார்கள். உண்மையை உணர்பவர்கள் அவற்றால் பயன் பெறுவார்கள். அப்படிப் பயன்பெற்றவர்கள், அறியாமையால் அவற்றைப் பழிப்பவர்களை நோக்கி இரங்குவார்கள். ''பாவம்! இவர்கள் உண்மையை அறியாமல், இவற்றால் பயனை அடையாமல் வாழ்க்கையை வீணாக்குகிறார்களே!'' என்று இரக்கம் கொள்வார்கள்.

இறைவனுடைய தோற்றம், அவனுடைய திருமேனியில் உள்ள பொருள்கள் யாவுமே பல உண்மைகளைப் புலப்படுத்தும். அவன் தன் திருமேனியில் என்பை அணிந்திருக்கிறான். முழு எலும்பாகிய எலும்புக்கூட்டைச் சங்காளம் என்பார்கள். அந்தப் பெருமான் சங்காளத்தைத் தோளின்மேல் சுமந்து கொண்டிருக்கிறான். அதைக்கண்டு, ''அருவருக்கத்தக்க எலும்பை அணிந்தவனையா கும்பிடுவது?'' என்று எண்ணக்கூடாது.

சடையப்ப வள்ளல் வீட்டுக்கு ஒருவர் விருந்தாளியாகப் போனார். வள்ளல் பெரிய செல்வர் என்று கேள்வியுற்றிருந்தார். அவர் சடையப்பருடைய வீட்டை அடைந்தபோது, அந்த வள்ளல் கீழே சிந்தியிருந்த நெல்மணிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தார். அதைக் கண்ட விருந்தாளிக்கு, 'சிந்தின சில நெல்லைப் பொறுக்குகிறாரே! இந்த அற்பமான பொருளை இப்படிப் பெரிதாக மதிப்பவர் எப்படிப் பெரிய வள்ளலாக இருக்கக்கூடும்?' என்று எண்ணினார். நெல்லைப் பொறுக்கி எடுத்தபிறகு சடையப்பர், ''வாருங்கள், சாப்பிட்ப் போகலாம்'' என்றார். அப்போது விருந்தாளி, ''சிந்திய வைரமணிகளைப் பொறுக்குவது போல, நெல்லைப் பொறுக்கினீர்களே! யாரையேனும் விட்டு அவற்றைப் பெருக்கித் தள்ளும்படி செய்திருக்கலாமே!'' என்றார். அதைக் கேட்டுச் சடையப்பவள்ளல் புன்னகை பூத்தார்; ஒன்றும் பேசவில்லை.

இருவரும் உணவு உண்ண அமர்ந்தார்கள். அப்போது சில வைரமணிகளை விருந்தாளியின் இலையில் போடச் சொன்னர் வள்ளல். அதைப் பார்த்துப் பிரமித்தார் விருந்தாளி.

''சாப்பிடுங்கள்'' என்ருர் சடையப்பர்.

''இதையா?'' என்று கேட்டார் விருந்தாளி.

''நெல்மணிகளைவிட வைரமணிகள் உயர்ந்தவை என்றீர்களே! இப்போது இதை உண்ணுங்கள்'' என்ருர் வள்ளல். விருந்தாளி திகைத்தார்.

''எவ்வளவு செல்வம் இருந்தாலும் உணவுக்கு ஒப்பாகாது. அந்த உணவுப் பொருளை வீணுக்காமல் பயன்படுத்த வேண்டும். சிறிதளவு நெல் என்று ஒதுக்கிவிட்டால் அதனுல் கிடைக்கும் ஒருபிடி சோற்றை வீணுக்கினவராவோம். அந்த ஒரு பிடி சோற்றுக்குத் திண்டாடுகிறவர்கள் உலகில் இருக்கிருர்கள்'' என்று வள்ளல் உண்மையை உணர்த்தியபொழுது விருந்தாளி, தம் அறியாமைக்கு இரங்கினர்.

இவ்வாறு ஊன்றிப் பார்க்காமல், மேமெலெழுந்தவாரியாகப் பார்த்து ஒன்றைத் தீர்மானிக்கக் கூடாது.

இறைவன் தேவர்களின் எலும்பை அணிந்திருக்கிருன். பிரமன் திருமாலாகியவரின் முழு எலும்பாகிய சங்காளத்தைத் தோள்மேலே புனைந்திருக்கிருன். இவை அவனுடைய நித்தியத் தன்மையைக் காட்டுவதோடு பதவி, பெருமை, பொருள் யாவும் நிலையாதவை என்பதையும் காட்டும். யார் அழிந்தாலும் அவன் அழியாத தகைமையன் என்று அவனை இனம் கண்டுகொள்ளும் அடையாளங்கள் அவை.

''நங்காய்இ தென்ன தவம்?
நரம்போடு எலும்பு அணிந்து
கங்காளம் தோள்மேலே
காதலித்தான் காணேடி!
கங்காளம் ஆமாகேள்:
காலாந் தரத்து இருவர்
தம் காலம் செய்யத்
தரித்தனன்காண் சாழலோ''

என்ற திருவாசகப் பாடல் இதனை உணர்த்துகிறது.

ஒரு குழந்தை இறந்தபிறகு அதனிடத்தில் இருந்த அன்பினுல் பெற்ருேர் அது வைத்திருந்த பண்டங்களைப் பாதுகாத்து வைப்பது போல, இறைவனும் தேவர்களின் எலும்புகளை அன்பினுல் அணியாக அணிந்து கொண்டான். அவனுடைய அழிவின்மையையும், எவ்வளவு சிறந்த பதவியில் இருந்தாலும் உரிய காலம் வந்தால் மற்றவர்கள் மறைவதையும் அந்த என்புகள் காட்டுகின்றன.

ஆகவே அவற்றைக் கண்டவர்கள் நாமும் இப்படியே அழிந்து போவோம் என்று உணர்ந்து கொள்ள வேண்டும்; அப்பால், நாம் அழியாத இன்பத்தைப் பெற வேண்டும் என்ற ஆர்வத்தை மேற்கொள்ள வேண்டும். அழியாதவனைச் சார்ந்தால் அழியாத இன்பம் பெறலாம் என்ற உணர்வு வரவேண்டும். யார் அழிந்தாலும் எது அழிந்தாலும் அழியாதவன் இறைவன் ஒருவனே என்று தெளிய வேண்டும். அப்பால் அவனை நன்கு மதித்து வழிபட வேண்டும்; புகழ வேண்டும்.

இவ்வளவு எண்ணங்களையும், முயற்சிகளையும் உண்டாக்குவதற்குத் துணையாக நிற்பது இறைவன் திருக்கோலம்.

நம்முடைய உடல் முதலியன நிலையாதவை என்பதைப் பல சமயங்களில் மறந்து போகிருேம். யாரேனும் இறந்து போனுல் அப்போதைக்கு அது நினைவுக்கு வருகிறது. அடுத்த கணமே மறந்து போகிறது. பிணத்தைக் கண்டால் அச்சம் உண்டாகிறது. பிறகு அந்த அச்சம் போய்விடுகிறது. சுடுகாடு நம்முடைய நிலையாமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. ஆனுல் அதை எப்போதுமா பார்த்துக் கொண்டிருக்கிருேம்? இத்தனையும் நம் உணர்வில் படவேண்டிய ஒரு பகுதியையே காட்டுகின்றன. அதாவது நம் வாழ்வு நிலையாதது என்பதை மட்டும் நினைக்கச் செய்கின்றன.

நமக்கு நோய் வந்திருக்கிறது என்று தெரிந்து கொள்வது அவசியம். ஆனுல் அதனேடு நின்றுவிட்டால் போதுமா? நோயை நீக்கும் மருத்துவனை நாடிச் செல்ல வேண்டும். நோயை அறிந்து நோய்க்கு மருந்தையும் தெரிந்து செயற்பட வேண்டும். அப்போது தான் நோய் நீங்கிச் சுகம் பெறலாம்.

அவ்வாறே, நாம் நிலையாத வாழ்வை உடையோம் என்பதை உணர்ந்துகொண்டு, நிலைத்த வாழ்வைப் பெற என்றும் நிலையான ஒருவனை அடைய வேண்டும். இத்தகைய எண்ணத்தை இறைவன் எலும்பணிந்த திருக்கோலம் உண்டாக்குகிறது. அந்த எண்ணத்தை நாம்

கொள்ள வேண்டுமென்றே அவன் எலும்பை அணிந்திருக்கிறான். இங்கே உணவு கிடைக்கும் என்று உணவுச்சாலையில் விளம்பரப் பலகை இருப்பது போல, இங்கே நிலையாத வாழ்வைப் போக்கி நிலைத்த இன்பத்தைப் பெறலாம் என்பதைக் குறிக்க இந்தத் திருக்கோலம் பூண்டிருக்கிறான். அதை அவமதிக்கலாமா? அது அறியாமை அல்லவா? அவமதிக்காமல் மதித்து உண்மையை உணர்ந்து அவனை வழிபட்டால், நாம் இந்த நிலையாத வாழ்க்கையை நீத்து என்றும் அழியாத இன்ப நிலையைப் பெறலாம்.

இதைக் காரைக்காலம்மையார் சொல்ல வருகிறார்.

இறைவனுடைய பராக்கிரமத்தை முதலில் சொல்கிறார். அவன் உலகினரைத் துன்புறுத்திய திரிபுராதிகளைத் தண்டித்தான். அவர்கள் ஆட்சிபுரிந்த மூன்று பறக்கும் கோட்டைகளாகிய திரிபுரங்களை அழித்து, அவர்களை ஆட்கொண்டான். தக்கனுடைய சாபத்தால் தேய்ந்த மதியைத் தன் வளரும் சடையில் வைத்துப் பாதுகாத்தான்.

**மதியா அடல் அவுணர் மாமதில்மூன்று அட்ட**
**மதிஆர் வளர்சடையி னானை,**

அத்தகைய பெருமான் திருமேனியிலே எலும்புச் சட்டகம் அணிந்ததைக் கண்டு அறியாமையால் இகழக் கூடாது; மதியினால் அதன் உண்மையை உணர்ந்து போற்றி வழிபட வேண்டும். அவ்வாறு வழிபட்டுத் துதித்தால் அவர்கள் மறுபடியும் இந்த உலகில் எலும்புகளையுடைய தேகத்துடன் பிறக்கமாட்டார்கள்.

**மதியாலே**
**என்பாக்கை யால் இகழாது ஏத்துவரேல்**
**இவ்வுலகில்**
**என்பாக்கை யாய்ப்பிறவார் ஈண்டு**

அவன் மும்மலங்களை அழிப்பவன் என்பதை அவன் திரிபுரசங்காரம் செய்த செயல் காட்டுகிறது. தன்னைச் சரண் அடைந்தாரைக் காப்பவன் என்பதை அவன் மதியை அணிந்த செயல் காட்டுகிறது. அத்தகையவன் செயல்களை எண்ணினால் அவன் திருக்கோலத்தின் உண்மை புலப்படும். மதியின்மையால் மேலெழுந்தவாரியாகக் கண்டு இகழ்வார் உண்டு. அப்படிச்செய்தால் நன்மை பெற முடியாது. மதியினால் உண்மையை உணர்ந்து ஏத்த வேண்டும். இந்த உலகில் வாழும்போதே ஏத்திப் பரவ வேண்டும். அப்படிச் செய்தால் மறுபடியும் இங்கே பிறக்கும் அவல நிலை உண்டாகாது. எலும்பால் கட்டிய உடம்பாகப் பிறக்கமாட்டார்கள்.

**மதியா அடல் அவுணர் மாமதில் மூன்று அட்ட**
**மதியார் வளர்சடையி னானை- மதியாலே**
**என்பு ஆக்கை யால்இகழாது ஏத்துவரேல்**
**இல்வுலகில்,**
**என்பு ஆக்கை யாய்ப்பிறவார் ஈண்டு.**

[தன்னை மதிக்காத, வலிமையுடைய அசுரர்களின் பெரிய மதில்கள் மூன்றை அழித்த, சந்திரன் தங்கும் வளரும் சடையை உடைய சிவபெருமானை, அவனணிந்த என்புச் சட்டத்தை (அறியாமையால்) இகழாமல், அறிவுத் திறத்தால் உண்மையைத் தெரிந்து புகழ்ந்து இவ்வுலகில் வழிபடுவார்களானால், அவர்கள் என்போடு கூடிய உடம்பாக இங்கே மீண்டும் பிறக்கமாட்டார்கள்.

மாமதில் மூன்று-இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்களாலமைந்த மதில்களையுடைய திரிபுரங்கள். என்பாக்கையால் இகழாது, மதியால் ஏத்துவரேல் என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். மதியின்மையால் இகழாது என்று வருவித்துப் பொருள்கொள்க. இவ்வுலகில் ஏத்துவரேல்—ஏத்துதலைச்சொன்னாலும் உபலட்சணத்தால், மனமொழி மெய்களால் வழிபடுவதையும் கொள்ள வேண்டும். என்பு ஆக்கையாகிய தோற்றம் உடையவராய், ஈண்டு-இவ்வுலகத்தில்.]

இறைவனுடைய திருக்கோலத்தின் உள்ளுறையை அறிந்து வழிபட்டால் பிறவி நீங்கி நித்திய சுகத்தை அடையலாம் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 37—ஆம், பாட்டு.



# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

**7 ஜூன் 1915**

**சுவாமி சிவானந்தர்:** ஒருவனுக்குச் சமாதியும் தியானமும் பெருமளவில் கைகூடியிருக்கலாம். ஆயினும் அவன் இறைவனிடம் அன்பு செலுத்த ஒருநாளும் மறக்கலாகாது. ஆண்டவனிடம் பக்தி செலுத்தாவிட்டால் ஒருவன் உயிர் வாழ்ந்து என்ன பயன்?



சுவாமி துரியானந்தர்

சுவாமி (அதாவது துரியானந்தர்): ''ஆம். 'ஒருவன் தன்னை உடம்பு என்றே எண்ணி வருகையில் தான் பகவானின் தாஸன் என்று கருதிக் கொள்ள வேண்டும்; தான் தனித்வம் கொண்ட ஜீவன் என்று எண்ணுகையில் தன்னை பகவானின் ஓர் அங்கமாகக் கருதவேண்டும்; தான் ஆத்மன் என்று உணரும்போதோ ஒருவன் பகவானாகவே இருக்கிறான்' என்று சொல்லப்படுவதை எவரும் ஒப்பியே ஆகவேண்டும்.

மிக அல்பமான துன்பம் நேர்ந்தாலும் பரிகாரத்தைத் தேடி ஓடுகிற மனிதன், பகவானுக்கு அடங்கிப் பணிய எவ்வாறு மறுக்கலாம்?

'ஸ்ரீராமகிருஷ்ண கதாம்ருதம்' படிக்கப்பட்டது. சுவாமி சிவானந்தர் கூறினார்:

''அந்நாட்களில் தட்சிணேஸ்வரமானது தெய்விகத்திலும் ஆனந்தத்திலும் கைலாசமாகவே இருந்தது. தெய்வ மூர்த்தங்களின் வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்வதிலும், பூஜை செய்து முடிப்பதிலுமே காலையிலிருந்து பிற்பகல் ஒரு மணி வரை கழிந்துவிடும். ஸ்ரீராமகிருஷ்ணரோ எப்போதும் இறைவனைப் பற்றியே பேசியபடி இருப்பார். மந்திரத்தால் கட்டுண்டவர்களைப் போல மக்கள் அதைக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். அந்தச் சூழலிலேயே ஈஸ்வர சிந்தனை துடித்துத் ததும்பிக் கொண்டிருக்கும். அவருடைய வேடிக்கைப் பேச்சுக்களும் தமாஷ்களுங்கூட பகவத் சம்பந்தமாகவே இருக்கும். அவையும் சமாதியில் கொண்டு சேர்ப்பனவாகவே இருக்கும். நண்பகல் உணவுக்குப் பின் அவர் ஓய்வுகொள்வார். ஆனால் மிகச் சிறிது நேரமே. பாக்கி நாள் முழுதும் ஆண்டவனைப் பற்றிப் பேசுவதிலேயே செல்லும். மாலையில் அவர் காளிகோயிலுக்குப் போவார். அங்கு அன்னைக்கு விசிறுவார். பிறகு திவ்ய போதையில் கிறுகிறுத்தபடி தமது அறைக்குத் திரும்புவார். சாதகர்களிடம், அவர்களுக்குக் காலையிலும் மாலையிலும் போதை போன்ற உணர்வு ஏற்படுகிறதா என அடிக்கடி விசாரிப்பது அவர் வழக்கம். இரவில் அவர் தூங்குவது வெகு துர்லபமே. கீழே படுத்தவுடனேயே எழுந்திருந்துவிடுவார். தமது அறையில் தூங்கும் மற்றோரையும் எழுப்புவார். 'இவ்வளவு தூக்கம் போடாதீர். எழுந்திருந்து தியானம் செய்வீர்' என்பார். பிறகு மறுபடி அவர் படுப்பார். அதிகாலையிலேயே விழிப்புறுவார். தம்முடைய ஈடிணையற்ற மதுரக் குரலில் பகவந் நாமங்களை ஓதுவார். மற்றவர்களும் எழுந்திருந்து, ஜபத் தியானங்களுக்காக அமருவர். அவ்வப்போது அவர் அவர்களிடம் போய் அவர்களது ஆசனத்தைத் திருத்திக் கொடுப்பார்.''

**ஜூன் 10**

**சுவாமி:** ''ஆத்மாவை ஸாக்ஷாத்கரிக்க வேண்டுமாயின் நீ பரித்யாகத்தின் மிக உயர்ந்த சிகரத்தில் ஏறியாக வேண்டும்.''

**ஜூன் 11**

**சுவாமி:** ''எல்லா வஸ்துக்களினின்றும் மனதைக் கழற்றிவிடுவதென்பது எளிதா என்ன? வீரன் ஒருவனே இதைச் செய்ய இயலும். அனவரதமும் புறப்பொருட்கள் உன் மனதுள் புகுந்து உன்னை வெற்றி கொள்ள முயன்றபடி உள்ளன. மனதிலேயே ஒன்றின் மீது ஒன்றாக அனேக தளங்கள் உள்ளன.(எனவே) வெறுமே கண்களையும் காதுகளையும் மட்டும் மூடிக்கொண்டு பயனில்லை.''

**ஜூன் 13**

**சுவாமி:** ''ராஜயோகத்தை விரைவில் கற்று முடிக்கவேண்டும் என்று — ஆசைப்படுகிறார்.

ஆனால் நாங்கள் (அந்தக் காலத்தில் இப்படி அவசரப்படாமல்) இந்தத் தேட்டத்தில் எங்களுடைய ஜீவனையே கொட்டி அர்ப்பணித்தோம். பாலப் பருவத்திலிருந்தே நாங்கள் இப்படிச் செய்து வந்திருக்கிறோம். ஆயினும் இன்னமும் மனம் தூய்மை பெறவில்லை. இன்னமும் அதில் ராக, த்வேஷங்கள் இருக்கின்றன... ஹே ப்ரபோ! என்னை உன்தாஸ தாஸனின் தாஸனுக்குவாயாக!

''அகம்பாவம் நல்லதல்ல; அது மிகவும் கொடுந் தீமை பயப்பது. மதுபானம் போல அகங்காரமானது புலன்களைச் சிதறடிக்கிறது. தாழ்நிலத்தில்தான் தண்ணீர் சேரும் என்று குருமகராஜ் சொல்வது வழக்கம். தாழ்ந்து அடங்கியிருந்தாலே மனம், இதயம் இவற்றின் நல்ல தன்மைகள் வெளிப்படுகின்றன. செருக்கு என்பது எப்போதும் தலையை உயரத் தூக்கிக் கொண்டிருக்கிறது. வளைந்து கொடுக்கும் நெகிழ்ச்சியுடன் கூடவே, உருக்கிரும்பின் உடையாத்தன்மையும் பெற்றிருப்பதுதான்(உண்மை) பலம். விட்டுக்கொடுக்கும் இனிய குணத்துடன் பலவித இயல்புடையவர்களோடும் இசைந்து வாழ எவனால் முடிகிறதோ அவனே பலவான்.

''உன்னை எப்போதும் அவன் உடைமையாக்கிக்கொள். அதன்பின் பயம் என்பதே இராது. 'நீ இந்த உலகில் பிறந்துவிட்டபடியால் இதில் (என்றும் உன் பெயர் இருக்குமாறு) நிரந்தரமான சுவட்டை விட்டுச் செல்வாய்' என்று சுவாமிஜி (விவேகானந்தர்) சொல்வது வழக்கம். வரநகர மடத்திலிருந்தபோது அவர், 'உங்களுக்குச் சொல்கிறேன் பாருங்கள், நம் பெயர்கள் வரலாற்றில் பொறிக்கப்படும்' என்றார். இதற்காக சுவாமி யோகானந்தர் அவரைப் பரிகசித்தார். சுவாமிஜி இப்படித் திரும்பினார்: 'நல்லது, நல்லது. வேதாந்தத்தின் உண்மைகளில் நான் அனைவருக்கும் உறுதியை ஏற்படுத்துவதை நீயே பார்ப்பாய். எனக்கு நீ காது கொடுக்காவிட்டால் நான் பறையர்களின் கிராமங்களுக்குச் சென்று, அந்த கிராமவாசிகளுக்கு வேதாந்தம் போதிப்பேன்!'

''பிரசாரம் செய்ய உனக்கு ஆசையிருக்குமாயின், நீ (அனுபவமாக) எதையேனும் **கொடுத்தாக** வேண்டும். ஒரு வகுப்புக்கு லெக்சர் கொடுப்பதோ, புத்தகத்தை விளக்கிச் சொல்வதோ போதனையாகாது. அவர்களுக்கு (போதிக்கப்படுபவர்களுக்கு) நீ (உன்னிலிருந்தே) ஏதேனும் **கொடுத்தாக** வேண்டும். எனவே முன்கூட்டியே நீ ஆத்மிகத்தை ஈட்டிக் கொண்டிருக்க வேண்டும். உன் உணர்ச்சிகளை நீ கட்டுப்படுத்த முடிகிறது என்று ஒருகாலும் தருக்குறாதே. அப்படிச்செய்தாலோ, அவை உடனேயே தங்கள் தலைகளைத் தூக்கிவிடும். 'ஹே பிரபோ! இவற்றிடமிருந்து என்னைக் காப்பாற்று' என்று எப்போதும் இறைவனை வேண்டிவா.

மன ஒருமைப்பாட்டுக்கு லயம், விக்ஷேபம், கஷாயம், ரஸாஸ்வாதம் முதலிய பல தடைகள் உள்ளன. மனதைத் தமஸ் (மந்தத்தனம்) கவ்விக்கொள்வதே லயம். அப்போது மனம் உணர்விழந்து தூங்கிவிடுகிறது. பெரும்பாலானான சாதகர்களை லயம் அழுத்தி வைக்கிறது. விக்ஷேபம் என்பது சித்தமானது ஏராளமான விஷயங்களில் சிதறுவதாகும். தியானமே ருசிக்காமல் போவதுதான் கஷாயம். அப்போது ஒருவருக்குத் தியானிப்பதில் விருப்பம் போய் விடுகிறது. ஆயினும் விடாப்பிடியாக முன்னேற வேண்டும். தெய்வ ரூபங்களின் உருவெளிக் காட்சிகளால் மனம் வசீகரிக்கப்பட்டு, அந்த நிலைக்குமேல் செல்ல மறுப்பது ரஸாஸ்வாதம் எனப்படும். சரீரம் உள்ளவரையில் உணர்ச்சி வேகங்களும் இருக்கத்தான் செய்யும். ஆயினும் பகவான் கிருபையால் அவை தலைதூக்க மாட்டாமல் கிடக்கும்.''

**ஜூன் 15**

**சுவாமி:** ''வெறுமே வேலை செய்துகொண்டேயிருப்பதில் பயனில்லை. வேலைக்குப் பின்னணியில் ஆத்மிக உணர்வு இல்லாவிடில் அது கொடும் சுமைதான்.''



# துருவாசர் வந்தார்!

நா. பார்த்தசாரதி

ஆசிரியர் : தீபம்

காட்டில் பாண்டவர்கள் நலமாகவும் நிம்மதி யாகவும் வாழ்கின்றனர் என்பதை அறிந்த போது துரியோதனுதியர் உள்ளத்தில் பொருமை கனன்றது. அவர்களை அப்படி நலமாக வாழ விடாமல் அடிக்கடி ஏதேனும் இடையூறுகள் செய்துகொண்டேயிருக்க வேண்டும் என்று எண்ணினர் துரியோதனுதியர்.

துருவாசர் என்று ஒரு முனிவர்; மகா முன் கோபி. எதற்கெடுத்தாலும் கொடிய சாபங் களைக் கொடுக்கக்கூடியவர். அந்த முனிவரை யும் அவரோடு சேர்ந்த வேறுசில முனிவர்களை யும், ''காட்டில் போய்ப் பாண்டவர்களைச் சந்தி யுங்கள்'' என்று வழியனுப்பி வைத்தான் துரி யோதனன்.

துருவாசரும் அவருடைய சகாக்களும் பாண் டவர்களைக் காண்பதற்காகக் காட்டுக்கு வந்து சேர்ந்தனர். தருமன் முதலிய சகோதரர்கள் ஐந்துபேரும் மிகவும் பயத்தோடு, பக்தியும் விநயமும் கொண்டு, துருவாசரை வரவேற்று வணங்கினுர்கள். துருவாசர் பாண்டவர்களை நலம் விசாரித்து ஆசி கூறினர்.

அப்போது சரியான நடுப்பகல் நேரமாகி யிருந்தது. துருவாசரும் அவரைச் சேர்ந்தவர் களும் வருவதற்கு முன்பே பாண்டவர்களும் திரௌபதியும் இருந்த உணவுப் பொருள்களை உண்டு முடித்துவிட்டு அக்ஷய பாத்திரத்தைக் கழுவிக் கவிழ்த்திருந்தனர்.

''பாண்டவர்களே! உங்களை இன்று சந்திக்க நேர்ந்தது குறித்துப் பெரிதும் மகிழ்ச்சி. நானும் எனது நண்பர்களும் சேர்ந்து இன்று இங்கே உண்ணலாம் என்று இருக்கின்றோம். போய் நீராடிவிட்டு வருகிறோம். உணவு தயாராக இருக்கட்டும்'' என்று கூறிவிட்டு நீராடப் புறப்பட்டுவிட்டனர் துருவாசர் முதலியோர்.

பாண்டவர்கள் என்ன செய்வதென்றே தோன்றுமல் திகைத்தனர். வேண்டுமென்றே துருவாசரின் சாபத்துக்குத் தங்களைப் பலியிடத் துரியோதனுதியர்கள் இந்தச் சூழ்ச்சியைச் செய் திருப்பது அவர்களுக்குப் புரிந்துவிட்டது. எப் போதுமே விரைவில் ஆத்திரத்தை அடைந்து விடக் கூடிய சுபாவத்தை உடையவனுகிய வீமன் இப்போதும் அதேபோல சினமடைந்து 'உடனே போய் துரியோதனுதியர்களைத் துவம்சம் செய்து விடுகிறேன்' என்று கிளம்பி விட்டான். ''நீ கூறுவதும், செய்யப்புகும் ஆத் திரமான செயலும் சிறிதளவும் நன்ருக இல்லை வீமா! முனிவர் உண்ணவருகிறேனென்று சொல்லிவிட்டு நீராடப்போயிருக்கும்போது நீ போருக்குப் புறப்படுவது அவருடைய கடுஞ் சாபத்தை வலுவில் அடையக் காரணமாகும்'' என்று கூறி, அருச்சுனன் வீமனைத் தடுத்தான்.

''எப்படியாவது துருவாசருக்கும் மற்றவர் களுக்கும் உணவு படைத்து ஆகவேண்டும். அதற்கான வழியைக் காண முயல்வோம்'' என்ருன் தருமன்.

''எனக்கு ஒரு வழி தோன்றுகிறது. நமக்குத் துன்பங்கள் ஏற்படும் ஒவ்வொரு நேரத்திலும் உதவிக் காப்பவன் கண்ணபிரான். அவன் துணை யையே இப்போதும் நாடுவோம்'' — நகுலன் கூறினுன்.

''ஆம் அதுவே சரியான வழி. கண்ணபிரா னின் உதவியைப் பெறுவதற்கு அவனைத்தேடிச் செல்லவேண்டிய அவசியமும்கூட நமக்குக் கிடையாது. நாம் இருந்த இடத்திலிருந்தே மனதிலே எண்ணினுல் போதும். நமக்கு உதவ வந்துவிடுவான் அவன்'' என்று சகாதேவன் அதை ஆமோதித்தான்.

சகோதரர்கள் இவ்வாறு சிந்தனையில் ஈடுபட் டிருந்தபோது வாட்டம் நிறைந்த முகத்தோடு திரௌபதி அங்கு வந்தாள். ''இதோ! முனிவர் நீராடிவிட்டு வந்துவிடப் போகிருர். என்ன செய்யலாம்?'' என்ருள். உடனே தருமன் நகுல சகாதேவர்களின் யோசனைப்படி கண்ணனை தியானம் செய்தான். சிறிது நேரத்தில் எல்லாம் வல்ல மாயவனுகிய கண்ணபிரான் பாண்டவர் களுக்கு முன் தோன்றினுன். ஐவரும் திரௌபதி யும் அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். துருவாசருக்கு உணவு படைக்க இயலாது

திகைத்திருக்கும் நிலையைக் கூறி வழிகாட்டு மாறு வேண்டிக்கொண்டனர். எல்லாம் அறிந்தும் ஒன்றும் அறியாதவனைப்போலச் சிரித்துக் கொண்டே நின்ற அந்தப் பெருமான் அவர்கள் துன்பத்தை அப்போதுதான் அறிந்துகொண்டவனைப்போல நடித்தான்.

''திரௌபதி! கதிரவன் உனக்கு அளித்திருக்கும் அக்ஷய பாத்திரத்தை இங்கே கொண்டு வா'' என்று வேண்டினார் கண்ணபிரான்.



திரௌபதி கழுவிக் கவிழ்த்திருந்த அக்ஷயபாத்திரத்தைக் கொண்டு வந்தாள்.

''நன்றாகப் பாத்திரத்தைப் பார்! அதில் ஏதாவது ஒட்டிக்கொண்டிருக்கிறதோ?''

திரௌபதி பார்த்தாள். ஒரே ஒரு சோற்று பருக்கை ஒட்டிக் கொண்டிருந்தது. அதை அப்படியே கண்ணனுக்கருகில் கொண்டுபோய்க் காண்பித்தாள். கண்ணன் அந்த ஒரே ஒரு பருக்கையைக் கொடுக்குமாறு வாங்கிச் சாப்பிட்டான். திரௌபதியும் பாண்டவர்களும் கண்ணனின் அந்தச் செயலுக்குக் காரணம் புரியாமல் அவனை ஏறிட்டுப் பார்த்தனர்.

''அம்மா திரௌபதி! துருவாசர் வயிறு நிறையச் சாப்பிட்டுவிட்டார். நீங்கள் கவலைப் படவேண்டாம்'' என்று திரௌபதியை நோக்கிக் கூறினான்.

அவள் திகைத்தாள். எவருக்கும் எதுவும் புரியவில்லை. கண்ணன் உண்ட அந்த ஒரு சோற்றுப் பருக்கை துருவாசரது வயிற்றையும் அவர்கூட வந்தவர்கள் வயிறுகளையும் எப்படி நிறைத்திருக்கும் என்பது அவர்களுக்கு விளங்கவில்லை.

மாயனாகிய கண்ணன் அதன் சூட்சுமத்தை அவர்களுக்கு விளக்கினான். அதே சமயத்தில் துருவாசர் முதலியவர்கள் நிறைந்த வயிறும் மலர்ந்த முகமுமாக அங்கே வந்து சேர்ந்தனர். எல்லாம் சர்வாந்தர்யாமியாகிய கண்ணபிரானின் திருவிளையாடல் என்பதை முனிவர் புரிந்து கொண்டார். அவர் கண்ணனை வணங்கிவிட்டுப் பாண்டவர்களை நோக்கிக் கூறினார்:

''நீங்கள் இட்ட விருந்து நன்றாக இருந்தது. வயிறு நிறைய உண்டோம். உங்கள் நல்லுள்ளத்தைப் பாராட்டி வாழ்த்துகிறேன்.''

பாண்டவர்கள் அவரை வணங்கினர். துருவாசர் தாம் காட்டிற்கு வரநேர்ந்த உண்மைக் காரணத்தைக் கூறிவிட்டார்.

''நேற்றிரவு அத்தினபுரியில் துரியோதனனுடைய அரண்மனைக்கு விருந்துண்ணப் போயிருந்தேன். அவன் அன்போடு உபசரித்து விருந்திட்டான். அவன் என்னிடம் காட்டிய பணிவும் அன்பும் எனக்கு ஆச்சரியத்தை அளித்தன. அது எதற்காக என்று இப்போது புரிந்து கொண்டேன். விருந்துண்டு முடிந்ததும், 'உனக்கு வேண்டிய வரம் ஒன்றைக்கேள்!' என்று அவனிடம் கூறினேன். தனக்கு நன்மை விளையாவிட்டாலும் ஏனையோர்க்குத் தீமை விளைந்தால் போதும் என்றெண்ணக் கூடியவனாகிய அந்தப் பேதை உடனே, 'முனிவரே! இன்று நீங்கள் என்னிடம் விருந்தினராக வந்ததுபோலவே நாளை பாண்டவர்களிடம் போய் விருந்தினராக அமையவேண்டும்' என்று கேட்டுக் கொண்டான். அதனால் இங்கு உங்களைத்தேடி வந்தேன்.''

முனிவர் தாம் வந்த காரணத்தைக் கூறி முடித்ததும் தருமன் அவரிடம் ஒரு வரம் வேண்டிக் கொண்டான்.

''துருவாசரே! துரியோதனுதியர்கள் இவ் விதம் செய்துவிட்டார்களே என்று அவர்கள் மேல் சினம் கொண்டு தாங்கள் சாபம் ஏதும் கொடுத்துவிடக்கூடாது என்பதே அடியேன் வேண்டுகோள்.''

துருவாசர் தருமனின் தன்னலமற்ற வேண்டுகோளைக் கேட்டு வியந்தார். தனக்கு நன்மை விளையாவிட்டாலும் பிறருக்குத் தீமை விளைந்தால் போதும் என்றெண்ணும் துரியோதனின் மனப்பான்மையையும் நினைத்துப் பார்த்தார் அவர். ஒன்று, மடுவாகத் தாழ்ந்திருந்தது. மற்றென்று மலையாக உயர்ந்திருந்தது. பிறகு துருவாசரும் கண்ணபிரானும் பாண்டவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு சென்றனர்.



மனிதன் வெறும் உணவினுல் மட்டும் வாழ முடியாது. —பைபிள்.

அறச் செயல்களுக்கு எப்பொழுதும் ஆண்டவனின் அருள் உண்டு. —வில்லியம் காங்கிரீவ்.

செல்வம் உடையவன் அதைத் தனித்து அனுபவித்தால் அதை இழந்தவனே. —புத்தர்.

எவரும் கடவுளை எந்தக் காலத்திலும் கண்டதில்லை. அன்பு செய்பவரிடம் அவர் வசிக்கிருர். —கிறிஸ்த்தவம்.

நீ உன் மனதிலிருந்து பழிவாங்கும் ஒரு சிறிய எண்ணத்தை நீக்கினும் உனக்குக் கொடிய நரகவேதனையிலிருந்து விடுதலை கிடைக்கும். —பார்ஸி சமயம்.

ஆத்மைவ ஹ்யாத்மனே பந்து: ''நீதான் உன் விடுதலைக்கும் வாழ்விற்கும் காரணமானவன்.'' —கீதை.

தேகம் அழிவதைப்போல, ஆன்மா அழிவது இல்லை. குடம் உடைகின்றபோது, குடத்தினுள் இருக்கும் காற்றும் ஆகாயமும் உடையாமல் இருப்பதைப் போல. —வள்ளலார்.

தேடும் திரவியமும் சேர்ந்த மணிப் பெட்டகமும்
கூட வரும் துணையோ கூருய் பராபரமே. —தாயுமானவர்.

ஒருவன் படகில் செல்லும்போது, தரையிலுள்ள மரங்கள் படகு செல்லும் திக்குக்கு எதிராக நகர்வதுபோல் அவனுக்குப் பிரமை ஏற்படுகிறது. பிறவிச் சூழலில் ஆத்மா சுழல்வதாகச் தோன்றுவதும் அப்படிப்பட்ட பிரமையே. —ஆதி சங்கரர்.

சட்டியோடு இருப்பதால் கள்ளின் நாற்றம் வானத்தைப் பற்றுவதில்லை. உபாதிகள் ஆத்மாவைப் பற்றுவதில்லை. சட்டியின் கள் நாற்றம் சட்டியோடு தொலைந்தது; வானம் தூயது தான். அதைப்போல உடலின் தொல்லைகள் உடலோடு ஒழிகின்றன. ஆத்மாமீது தொற்றிக் கொள்ள மாட்டாது. —விவேகசூடாமணி—451.

''லட்சுமணு; நான் அதர்மத்திற்குப் பயப்படுபவன். தப்பு காரியங்களைச் செய்ய விரும்பாதவன். அயோத்தியில் முடிசூட்டிக்கொள்வது எனக்கு மிகவும் சுலபமானதுதான். என்றுலும் அதர்ம மார்க்கத்தில் அரசைப்பெற விருப்பமில்லை. அயோத்தி என்ன? தேவலோகத்திலிருந்து இந்திர பதவியை அடைந்து அரசு பெறவும் எனக்குச் சக்தியுண்டு. என் கோதண்டமும் பலமும் எங்கே சென்றன? அநீதி மார்க்கத்தில் இருந்து பணம் சம்பாதிக்கக்கூடாது என்பதால்தான் சும்மா இருக்கிறேன். தர்மத்தைக் கடைப்பிடித்து நாம் ரட்சித்தால் அது நம்மைக் காக்கும்.''
—ஸ்ரீ ராமபிரான் காட்டுக்குச் சென்றபோது கூறியது.



# மதமே எனக்குத் தாயாகும்

நாக முத்தையா

1

அறிவு தங்கும் நல்லவராம்
ஆற்றல் பொங்கும் வல்லவராம்
உறவு கொண்டு புவியோர்கள்
ஒத்து வாழ உழைத்தவராம்

2

விவேகா னந்தர் எனும்பெயரில்
வியந்து கற்ருேர் மெச்சிடவே
புவியில் பிறந்த புண்ணியனும்
புவியோர்போற்றும்மன்னனுமாம்

3

கப்பல் ஏறிக் கடல்தாண்டக்
கருதி அன்னேன் ஓர்நாளில்
கப்பற் பயணம் செல்லுகையில்
கண்டார் அருகில் வெள்ளேயனே!

4

வெள்ளே நிறத்தான் இந்தியரை
வெறிபி டித்த வார்த்தைகளால்
எள்ளி நகைத்துப் பேசினனே.
இந்து மதத்தை ஏசினனே!

5

விவேகா னந்தர் அவனருகில்
விரைந்து சென்றே இந்தியரின்
விவேக முள்ள வாழ்க்கையினே
விளக்கத் தோடு சொல்லினரே!

6

இந்து மதத்தின் பெருமையினே
எடுத்தெ டுத்துப் புகன்றனரே
எந்த வழியில் சொன்னுலும்
ஏற்க வில்லே மேனுட்டான்!

7

அடக்க மொழிகள் வெற்றியினே
அளிக்க வில்லே எனக்கண்டு
நடுக்கும் குரலில் எச்சரித்தார்
நடுங்கி விட்டான் வெள்ளேயனும்!

8

'இந்து மதத்தை — இந்தியரை —
இனியும் இழித்துப் பேசுவையேல்
முந்தி மோதும் அலேயிடையே
மூழ்க வைப்பேன் உனே!' என்ருர்.

9

அக்னி பறக்கும் கண்களினே—
ஆற்றல் தொனிக்கும்
வார்த்தையினே
தக்க சமயம் கண்ணுற்றுத்
தளர்ந்துபயந்தான்மேனுட்டான்.

10

அடிக்குப் பயந்து வாய்மூடி
அமைதி கொண்ட அந்நியன்பால்
வெடிக்கும் மருந்தாய் வீறுற்ற
விவேகா னந்தர் சொன்னுர்காண்.

11

"மதமே எனக்குத் தாயாகும்.
மனித குலமோ ஒன்ருகும்
இதனே மறத்தல் தீதாகும்
இழித்துப் பேசின் உயிர்போகும்!"

## ஸ்ரீராமக்ருஷ்ணகர்ணாம்ருதம்

### ஸ்ரீ பாலபட்டர் அருளியது

உரையாசிரியர் : அண்ணா என். சுப்ரமண்யம்

6. கருணை நிறைந்த கடைக்கண் பார்வை

मुष्णन् दिगन्त-दुरितं स्वयशोवितानैः
पुष्णन् श्रुतिस्मृतिगणान् स्ववचोविलासैः ।
आश्वासय--न्नशरणान् स्वकृपाकटाक्षैः ।
श्रीरामकृष्ण-भगवा-नवभाति लोके ॥ ६ ॥

முஷ்ணந் திகந்த—துரிதம் ஸ்வயஸோவிதாநை:
புஷ்ணந் ஶ்ருதிஸ்ம்ருதி—கணாந் ஸ்வவசோவிலாஸை: |
ஆஶ்வாஸயந்—நசரணாந் ஸ்வக்ருபாகடாக்ஷை:
ஸ்ரீராமக்ருஷ்ண—பகவா—நவபாதி லோகே ‖ 6 ‖

பதவுரை:—(ஸ்வயஸோவிதாநை:) தமது பரந்த கீர்த்தியால் (திகந்த—துரிதம்) எல்லாத் திசைகளிலும் உள்ள பாவங்களை (முஷ்ணந்) போக்குபவராயும் (ஸ்வ-வசோ விலாஸை:) தமது அழகிய பேச்சினால் (ஶ்ருதி—ஸ்ம்ருதிகணாந்) வேத சாஸ்திரத் தொகுதிகளை (புஷ்ணந்) ஊட்டி வளர்ப்பவராயும் (ஸ்வக்ருபா—கடாக்ஷை:) தமது கருணை நிறைந்த கடைக்கண் பார்வையால் (அஶரணாந்) புகலற்றவர்களுக்கு (ஆஶ்வாஸயந்) ஆறுதல் அளிப்பவராயும் (ஸ்ரீராமக்ருஷ்ண—பகவாந்) ஸ்ரீ ராமகிருஷ்ண பகவான் (லோகே) உலகில் (அவபாதி) பிரகாசிக்கிறார்.

6. தமது பரந்த கீர்த்தியால் எல்லாத் திசைகளிலும் உள்ள பாவங்களைப் போக்குபவராகவும் தமது அழகிய பேச்சினால் வேத சாஸ்திரத் தொகுதிகளை ஊட்டி வளர்ப்பவராகவும், தமது கருணை நிறைந்த பார்வையால் புகலற்றவர்களுக்கு ஆறுதல் தருபவராகவும், ஸ்ரீராமகிருஷ்ண பகவான் உலகில் பிரகாசிக்கிறார்.

7. உலகனைத்திற்கும் ஒரு அளவுகோல்

पौरस्त्य-पश्चिम-परिष्कृति-सिन्धुयुग्मं
सन्धाय सर्वविध-धर्मनदीः प्रवाह्य ।
गौर्यास्स देहकृदिवैष सुतोऽपि भाति
भूमण्डलस्य सकलस्य च मानदण्डः ॥ ७ ॥

பௌரஸ்த்ய—பஶ்சிம—பரிஷ்க்ருதி—ஸிந்துயுக்மம்
ஸந்தாய ஸர்வ—வித—தர்மநதீ: ப்ரவாஹ்ய |
கௌர்யா: ஸ தேஹக்ருதிவைஷ ஸுதோऽபி பாதி
பூமண்டலஸ்ய ஸகலஸ்ய ச மானதண்ட: ‖ 7 ‖

**பதவுரை:**—கிழக்கு சமுத்திரம் மேற்கு சமுத்திரம் இரண்டையும் பிணைத்துப் பல நதிகளைப் பாயச்செய்யும் (கௌர்யா: ஸ தேஹக்ருத் இவ) கௌரியின் பிதாவான அந்த இமவானைப் போல (ஏஷ: ஸுத: அபி) இந்தப் பராசக்தி புத்திரரான ராமகிருஷ்ணரும் (பௌரஸ்த்ய) கிழைநாட்டு (பஸ்சிம) மேலை நாட்டு (பரிஷ்க்ருதி—ஸிந்து—யுக்மம்) பண்புக் கடல்கள் இரண்டையும் (ஸந்தாய) பிணைத்து (ஸர்வ—வித—தர்ம—நதீ:) எல்லாவிதமான தர்ம வடிவான நதிகளையும் (ப்ரவாஹ்ய) பாயச்செய்து, (பூமண்டலஸ்ய) பூவுலகம் (ஸர்வஸ்யச) அனைத்திற்கும் (மானதண்ட:) ஒரு அளவு கோலாக (பாதி) விளங்குகிறார்.

7, கிழக்கு சமுத்திரம் மேற்கு சமுத்திரம் இரண்டையும் பிணைத்துப் பல நதிகளைப் பாயச் செய்யும் கௌரியின் பிதாவான அந்த இமவானைப்போல, இந்தப் பராசக்தியின் புதல்வராகிய ராமகிருஷ்ணரும் கிழைநாட்டு, மேலைநாட்டுப் பண்புக்கடல்கள் இரண்டையும் பிணைத்து எல்லாவிதமான தர்ம வடிவான நதிகளையும் பாயச் செய்து, பூவுலகம் அனைத்திற்கும் ஓர் அளவு கோலாக விளங்குகிறார்.

**ஒப்பிடுக:**—அஸ்த்யுத்தரஸ்யாம் திஸி தேவதாத்மா
ஹிமாலயோ நாம நகாதிராஜ: |
பூர்வாபரௌ தோயநிதீவ காஹ்ய
ஸ்தித: ப்ருதிவ்யா இவ மானதண்ட: ||

—காளிதாஸன்—குமாரஸம்பவம் (1—1)

### 8. உலக குரு

न विद्यते यस्य गुणेषु संगो
न लिप्यते कर्मशुभाशुभै-र्यः ।
यस्सर्व-भोक्ताऽखिलकर्म-कर्ता
जगद्गुरु-र्भाति स रामकृष्णः ॥ ८ ॥

ந வித்யதே யஸ்ய குணேஷு ஸங்கோ
ந லிப்யதே கர்ம-ஶுபா-ஶுபைர்—ய: |
யஸ்ஸர்வ—போக்தாऽகில—கர்ம—கர்த்தா
ஜகத்-குருர்—பாதி ஸ ராம்க்ருஷ்ண: || 8 ||

பதவுரை:—(யஸ்ய) எவருக்கு (குணேஷு) முக்குணங்களில் (ஸங்க:) பற்று (ந வித்யதே) இல்லையோ, (ய:) எவர் (கர்ம—ஶுப—அஶுபை:) புண்ணியச் செயல்களாலோ பாவச் செயல்களாலோ, (ந லிப்யதே) தொடப்படுவதில்லையோ (ய:) எவர் (ஸர்வ போக்தா) எல்லாவற்றையும் அனுபவிப்பவரோ (அகில—கர்மகர்த்தா) எல்லாக் கர்மங்களையும் செய்பவரோ (ஸ:) அந்த (ராமக்ருஷ்ண:) ராமகிருஷ்ணர் (ஜகத்குரு:) உலக குருவாக(பாதி) விளங்குகிறார்.

8. எவருக்கு முக்குணங்களில் பற்று இல்லையோ, எவர் புண்ணியச் செயல்களாலோ பாவச் செயல்களாலோ தொடப்படுவதில்லையோ, எவர் எல்லாவற்றையும் அனுபவிப்பவரோ, எல்லா கர்மங்களையும் செய்பவரோ அந்த ராமகிருஷ்ணர் உலக குருவாக விளங்குகிறார்.



# சக்தியும் சிவமும்

அருட்பா அரசு கிரிதாரி பிரசாத்

இறை வழிபாட்டின் தனிச்சிறப்பு மிக்க ஓர் இலக்கணமாகத் திகழ்வது சக்தி வழிபாடு. சிவ பெருமானைப் பக்தர்கள் அனைவரும் தொன் மைக் காலத்திலேயே வழிபட்டனர். மாணிக்க வாசகரும் இதனைத் தம் அழகிய திருவாச கத்தில்

'தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும்
பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும்
உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய்
கோத்தும்பீ'

தொன்மைக் கோலம் என அழைக்கின்றார். இதனையே இன்று திருச்செங்கோடு போன்ற தலத்தில் அர்த்த நாரீசுவரர் என இறைவனை நாம் வணங்குகின்றோம். சக்தியில்லை என்றால் மனிதன் சவமாகிவிடுகிறான். சவம் சிவமாகச் சக்தியின் அருள் இன்றியமையாதது.

ஞான சம்பந்தப் பெருமான் புனிதவாய் மலர்ந்து அமுதமோந்து அவருக்குத் தென் பட்ட உருவமும் இவ்வுருவமே. இதனை அவர்

'தோடுடைய செவியன் விடையேறி
ஓர் தூவெண்மதி சூடி
காடுடைய சுடலைப் பொடிபூசி என் உள்ளம்
கவர் கள்வன்'

என்று அம்மையும் அப்பனுமாய்த் தனக்கு இறைவன் நல்கிய காட்சியை வியந்து பாடு கிறார்.

அப்பர் பெருமானும் தம் ஒப்பில்லா வாச கத்தில் இறைவனை அப்பன் என்றும் அம்மை என்றும் பாடி மகிழ்கிறார்.

'அப்பன் நீ, அம்மை நீ ஐயனும் நீ,
அன்புடைய மாமனும் மாமியும்நீ,
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும்நீ'

எங்கும் வியாபித்துள்ள முழுமுதற்பொருள் ஆணாக வடிவெடுக்கும்போது சிவனாகவும் பெண் ணாக இருக்கும்போது சக்தியாகவும் போற் றப் பெறுகிறது. உலகம் என்பது இந்த இரண் டின் கூட்டுறவுதான். இதனை பகவான் இராம கிருஷ்ணர் களிமண்ணும் நீரும்போல் என்பார். வெறும் மண்போல் இருக்கும் ஈசனை, சக்தி என்னும் நீர், தண்ணளி சுரக்கும் ஓர் தனித் தெய்வமாக மாற்றுகிறது என்று கூறுகிறார். சக்தியின்றேல் மனிதன் சவம் தான். சவம் சிவமாகச் சக்தியின் அருள் நமக்கு இன்றியமை யாதது.

சக்திகளைப் பல கலைகளில் போற்றுவர். சக்தி கள் ஒன்பது என்றும், இவை நவராத்திரியின் போது அருளோச்சும் ஆற்றல் மிக்கவைகளா கத் திகழ்கின்றன என்றும் கூறுவதுண்டு. சக்திகளை மூன்று சுருக்கி அலைமகள், கலைமகள், மலைமகள் எனச் செப்புவாரும் உளர். வங்காள நாட்டிலே சக்தி வழிபாடு மிகச் சிறந்த முறை யில் கொண்டாடப்பெறுகிறது. சண்டி, காளி, பவானி என்னும் பல பெயர்களால் சக்திபூஜை நடைபெறுகிறது. பகவான் இராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் காளிதேவியிடம் அபாரமான ஈடுபாடு கொண்டிருந்தார்கள் என்பதை வரலாறு தெரிவிக்கிறது. பகவான் சங்கரரும் சாரதாதேவியின் அருள் பெற்றே ஆன்மப்பேற்றை எய்தினார்.

தமிழகத்தில் அபிராமிபட்டரின் பாடல்கள் பெரிதும் போற்றப்படுகின்றன. திருக்கடையூர் அபிராமி என்று போற்றப்படும் தேவியை வழி பட்டவர் அபிராமிபட்டர்.

ஒருநாள் அரசன் வழிபட ஆலயத்திற்கு வந் தான். வழிபாடு நடைபெறும் நேரத்தில், 'இன்று என்ன நாள்?' என்று பட்டரைநோக்கி அரசன் கேட்டான். பட்டர், 'இன்று பௌர் ணமி முழுமதி' என்று கூறினார். அருகிலிருந்த வர் அனைவரும் ஆச்சரியமடைந்தனர். அன்று முழு அமாவாசை நாள். அதனைப் பின்னால் உணர்ந்த பட்டர் பெரிதும் துன்புற்றார். தேவி, தன் பக்தன் அறியாது கூறிய மொழியை மெய்ப்பிக்கக் கருதித் தன் காதில் துலங்கிய வைரக் குண்டலத்தை அகற்றி அரசன் செல்லும் பாதையில் வானவீதியை நோக்கி எறிந்தாள். அந்தக் குண்டலம் பேரொளிவிட்டு மின்னியது. இதனைக் கண்ணுற்ற அரசன் அன்று முழுமதி நாள் என்றே கருதி மாளிகையை எய்தினான்.

அபிராமிபட்டர் இதனை உணர்ந்து அபிராமி அம்மையின் பெயரால் நூறு பாடல்களைப் பாடினார். அவற்றில் ஒன்று;-

'உடைத்தனை வஞ்சப்பிறவியை உள்ளம்
உருகும் அன்பு
படைத்தனை நின்பாதயுகம் ஆடம்
பணி எவர்க்கே
அடைத்தனை என் நெஞ்சத்து
அழுக்கை எல்லாம் நின் அருட்புனலால்
துடைத்தனை, சுந்தரி, நின் அருள்
ஏது என்று சொல்வதே'

என்று பாடுகிறார்.

இப்படிப் பல பாடல்களில் அபிராமிபட்டர் உள்ளம் உருகுகிறார்.

# சின்மயி அன்னை

## கோமதி ராஜாங்கம்

அன்னை என்பவள் அதிசுலபமாக எளிதில் கிடைக்கக்கூடியவள்; மனதில் பயமின்றி அன்னையிடம் எதுவேண்டுமானாலும் தாராளமாகக் கேட்கலாம். புலி, கரடி, சிங்கம் முதலிய கொடிய மிருகங்கள்கூடத் தமது குட்டிகளிடம் அன்பைச் சொரிகின்றன. ஸ்ரீபகவத்பாதர்கூட ''குபுத்ரோ ஜாயேதக்வசிதபி குமாதா ந பவதி — குழந்தைகள் கெட்டவர்களாக இருக்கலாம். ஆனால் ஒரு தாய் கெட்டவளாக ஒருக்காலும் இருக்கமாட்டாள்'' என்கிறார்.



ஆனால், சரத்சந்த்ர சக்கரவர்த்திக்கு அன்னையை அணுகவே பயம்! ஏற்கெனவே அவர் கூச்சப்படுபவர். மேலும் ராஜராஜேச்வரிக்கு நித்யபுஷ்டையும் கரீஷிணியும் இருப்பது போல் அன்னைக்கு யோகின்மாவும் கோலப்மாவும் துவாரபாலகர்களாய் அமைந்தனர். அவர்களுடைய அனுமதி இல்லாமல் யார் சென்றாலும் அவர்களுடைய ஆயிரம் ஆயிரம் கேள்விகளுக்குப் பதில் கூறிவிட்டுத்தான் அன்னையைத் தரிசிக்க முடியும்.

சரத்சந்திரர் கல்கத்தாவில் உத்யோகம் பார்த்தபோதெல்லாம், வேலை நிமித்தமாகவும், ஏற்கெனவேயே ஸங்கோஜம் அதிகமானதாலும், அன்னையைக் காணச் செல்ல 'இன்று போகலாம். நாளை போகலாம்' என்று நாட்கள் நழுவின. இப்படி மீனமேஷம் பார்த்துக் கொண்டு சென்றால்? 'அன்னை ஜயராம்பாடிக்குச் சென்றுவிட்டார். இனி இரண்டு மாதங்கள் சென்றுதான் திரும்புவார்' என்று தகவல் கிடைக்கும்.

ஒருதரம் உத்போதன் மடத்தில் அன்னை இருக்கிறார் என்று கேள்விப்பட்டு, அங்கு சென்றார். ஸ்ரீசாரதானந்தா மகராஜ் அன்னைக்கு உடல் நலம் சரியில்லை என்றும் பிறகு வரும்படியும் கூறிவிட்டார். பிறகு என்னவாயிற்று!

வண்ணான் நீர்நிலையில் நின்று கொண்டு இருந்தாலும், தாகத்தினால் தொண்டை வறண்டாலும், 'இந்தத் துணியைத் தோய்த்துவிட்டுக் குடிக்கலாம்; அந்தத் துணியைத் தோய்த்து விட்டுக் குடிக்கலாம்' என்று கஷ்டப்படுவது போல் சரத்சந்திரருக்கு நாட்கள் ஓடின; மாதங்கள் மறைந்தன ; வருடங்கள் பறந்தன. அவரைக் கல்கத்தாவில் இருந்து சென்னைக்கே மாற்றிவிட்டார்கள். 'இனி இந்த ஜன்மத்தில் சின்மயி அன்னையின் தரிசனம் நமக்கு இல்லை' என்று நினைக்கும்போதெல்லாம், 'ஐயோ, வங்க புத்ரனாகப் பிறந்தும் நமக்கு அந்த பாக்யம் இல்லையே' என்று மறுகுவார்.

கால ஏட்டின் பக்கங்களாக இரண்டு வருடங்கள் புரண்டன. நவராத்ரிக்காக ஒருமாதம் சர்க்கார் விடுமுறை அளித்தது. மேலும் ஒரு மாதம் லீவு போட்டுவிட்டு சரத்சந்திரர் கல்கத்தா வந்தார். வந்ததும் வராததுமாக அன்னை இருப்பிடம் தேடி ஓடினார். ஆனால் அந்தோ! அன்னை ஜயராம்பாடி சென்றுவிட்டதாகக் கூறினார்கள்.

ஏமாற்றமே வெற்றியின் முதல்படி அல்லவா? பத்துத் தடவை ஏமாந்தால் பதினோராவது தடவை மனமே வழிகாட்டுகிறது. இந்தத் தடவை நவராத்ரிக்கு இந்த மிருண்மயி அன்னையைப் பூஜை செய்யப்போவதில்லை. சின்மயி அன்னையை தரிசனம் செய்தே திருவது, ஜயராம்பாடிக்குச் செல்வது எனத் துணிந்தார். ஆனால் பாழும் வெட்கம் தனது உடன்பிறந்தவனான பயத்தையும் துணைக்கு அழைத்துக்கொண்டது. ஆனாலும் என்ன! 'நானும் ஒரு துணையைக் கூட்டிக்

கொண்டு செல்வேன்' எனத் தைரியம்கொண்டார். தமது நண்பன் நாஸ்திக் சக்ரவர்த்தி துணையை நாடினர். (அவனுடைய உண்மையான பெயர் நாஸ்திக் அல்ல. அவனது உண்மைப் பெயர் வரவேண்டாம் என்று சரத் கூறியதால் அதை இங்கு எழுதவில்லை.)

நாஸ்திக்குக்கு இறைவன், பக்தி, கோவில், பூஜை, சாது மகாத்மாக்கள் இவைகளில் நம்பிக்கை கிடையாது. 'போடா, முட்டாள். அன்னையாம் சின்மயியாம். உனக்கு வேறு வேலை இல்லை. பேசாமல் தினம் ஹூக்ளி கரைக்குப் போய் நண்பர்களுடன் சதுரங்கம் விளையாடி லீவுகாலத்தைப் பயனுள்ளதாக்கிக் கொள்' என்றான். கடைசியில் கெஞ்சிக் கூத்தாடி அவனைச் சம்மதிக்கச் செய்து இருவருமாக விஷ்ணுபுரத்துக்கு ரயில் ஏறினர்கள்.

அந்த நாளில் விஷ்ணுபுரத்திலிருந்து ஜயராம்பாடிக்குக் கட்டை வண்டியிலாவது நடந்தாவதுதான் செல்ல வேண்டும். இவர்கள் இரவு இரண்டு மணிக்கு விஷ்ணுபுரத்து ஸ்டேஷனில் இறங்கினர்கள். வானம் இருண்டு பயங்கரமாக இருந்தது; சிறு தூறல். வேறு வழியின்றி இருவரும் ஸ்டேஷனில் தூங்கி வழிந்தனர். அதிகாலையில் தூறல் பலமாகிவிட்டது. ஆனல் இவர்கள் அதைப் பொருட்படுத்தவில்லை. அங்கவஸ்திரத்தைத் தலையில் கட்டிக்கொண்டு நடையில் இறங்கினர்கள். நாஸ்திகனுக்கு ஒரு புறம் கோபம். மறுபுறம் நண்பனின் சிரத்தையைக் கண்டு ஏளனம். மழை வலுத்தது. கிராமத்துப் புழுதி படிந்த ரோடு. மழைத் தாரகைகள் புழுதியைப் பிசைந்து சேருக்கின. இருவரும் வேஷ்டியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு வேகமாக நடக்கலாயினர். மேலெல்லாம் சகதி. துணி எல்லாம் சேறு. தாகத்தால் தொண்டை வறண்டு நாக்கு அண்ணத்தில் ஒட்டிக் கொள்ளுகிறது. மணி இரண்டு. பசி, எலி மாதிரி வயிற்றைக் குடைகிறது. இருவரும் இந்நிலையில் ஆமோதர் சிற்றாறின் கரையை வந்தடைந்தனர்.

அது ஒரு சிறு காட்டாறு. அகலம் இல்லை. செங்குத்தான கரைகள். எப்பொழுதும் வஞ்சகர்கள் இதயம்போல் உலர்ந்தே இருக்கும். ஆனல் ஒரு சிறு மழைகூடத் தாங்காது. அற்பனுக்குப் பாக்யம் வந்தாற்போல் தலைகீழாகத் துள்ளிக்குதிக்கும். ஆழமோ, அரை பனை பிரமாணம் இருக்கும். இரு நண்பர்களையும் கண்டு அந்நதி அலைக்கரங்களை நீட்டிக் கெக்கலி கொட்டிச் சிரித்துத் துள்ளிக் குதித்தது. பசியோ வயிற்றைக் கிள்ளுகிறது.

அம்மா! அம்மா! இதுவென்ன சோதனை! நதியில் வீழ்ந்து நீந்திக் கரை ஏற முடியுமா? செய்வதறியாமல் தவிக்கும்போது தூரத்தில் ஒரு தோணி வருவதைக் கண்டார்கள். சரத் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. தோணி இவர்களுக்காவே வந்த மாதிரி அருகில் வந்து நின்றது. இருவரும் ஏறி அக்கரை சென்றூர்கள். சகதியும் அழுக்குமாக இந்த உடையிலா அன்னையைத் தரிசனம் செய்வது? இருவரும் ஒரு குளத்தில் நன்ருக ஸ்நானம் செய்துவிட்டு அன்னையின் குடிலுக்கருகில் செல்லும்போது மணி மூன்று அடித்துவிட்டது.

வாசலில் கோலப்மா கால்களை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். இவர்களைக் கண்டவுடனேயே வெகுண்டெழுந்தார். 'என்ன பிள்ளைகள் நீங்கள்? அம்மாவைப் பட்டினி போடவேண்டுமென்றே நீங்கள் கங்கணம் கட்டிக்கொண்டு நேரம் கழித்து வந்தீர்களா? அம்மா சமையல் செய்து வைத்துக் கொண்டு இரண்டுமணி நேரமாக உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிருளே!

'நீங்கள் பசியாருமல் அவள் உணவருந்தமாட்டாள் என்பது உங்களுக்குத் தெரியாதா? ஹூம். சோம்பேறிப் பசங்கள். உங்களுக்கு என்ன தெரியும் அன்னையின் அருமை?' என்று தாறுமாருக ஏசவே, இருவரும் செய்வதறியாமல் வெட்கி நின்றனர். 'சரி, சரி. உள்ளே வாருங்கள்' என்று கிழவி எழுந்து உள்ளே சென்றுள்.

ஆகா ஆனந்தம்! அங்கு அவர்கள் சின்மயி அன்னையைத் தரிசித்தார்கள். கையில் புஷ்பத் தட்டுடன் கருணையே உருவாக, 'அப்பனே வா. வாருங்கள்! ஏன் இத்தனை நேரம்? நீ வருவாயே என்று உனக்குப் பிடித்தமான மசாலாக் கறி செய்து வைத்திருக்கிறேனே. உன்னை ஒரே தரம்தான் பார்த்திருக்கிறேன். அன்று மசாலாக்கறியை எனது கையால் உனக்குப் பறிமாறினேனே! நீ விரும்பிச் சாப்பிட்டாயே! அதை நினைத்துக்கொண்டு இன்று ஸ்பெஷலாகத் தயாரித்திருக்கிறேன். அடடா! நனைந்த துணிகளா! உடம்புக்கு ஆகுமா! இதோ உலர்ந்த

துணிகள் கொண்டு வருகிறேன். அதற்குள் கைகால்களைக் கழுவுங்கள். இதோ தண்ணீர்' என்று கூறி அவசரமாகத் துணி எடுக்க உள்ளே சென்றாள் அன்னை.

இருவரும் திகிலிலிருந்து விடுபடாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு நின்றார்கள். 'இது என்னடா! என்றைக்கோ அன்னையை சந்தித்தேனாமே. எனக்குப் பிடித்தமான மசாலாவை அன்னை இன்னும் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறாளே. நாம் இன்று வருவோம் என்று அன்னைக்கு எவ்விதம் தெரிந்தது? இது என்ன மனோசக்தி? உண்மையிலேயே அன்னை சின்மயிதானோ' என்ற எண்ணங்கள் சரத்தின் மனதில் அலை அலையாய் மோதின.

இதற்குள் அன்னை துணிகளுடன் வரவே, இருவரும் உடைமாற்றிக் கொண்டு உண்ண அமர்ந்ததும், தட்டில் அழகாக முன்னமேயே பரிமாறி வைத்திருந்த உணவை அன்னை கொண்டு வந்து வைத்தாள். தானே அமர்ந்துகொண்டு விசிறி கொண்டு வீசினார். 'இன்று என் கையினாலேயே சமைத்தேண்டா குழந்தாய்! இன்று நீ வருவாய் என்று எனக்குத் தெரியும்' என்று அன்னை கூறியதும், 'ஆ. ஆ. இது என்ன எனக்கு ஜன்னி பிறந்துவிட்டதா—அன்னையைச் சுற்றி இது என்ன ஒளி! கண்கள் கூசுகின்றனவே. தலைசுற்றுகிறதே. உலகமே சுழல்வதுபோல அல்லவா இருக்கிறது? அம்மா நீ யார்? சொல், சொல், சொல்' என்று நாக் குழற சரத் கேட்டதும், 'குழந்தாய்! நான் தாய். உனக்கு மட்டுமல்ல. உலகம் முழுவதுக்கும் நான் அன்னையடா' என்று அன்னை மறுமொழி புகன்றதும் சரத்துக்குக் கனவுபோல் தோன்றியது. எப்படி உண்டான்? எப்படிக் கை கழுவினான்? படுக்கையில் எப்பொழுது படுத்தான்? நாஸ்திக நண்பன் என்ன ஆனான்! ஊஹூம், அது என்ன உறக்கமா! மயக்கமா! தேகம் ஏன் இப்படி நடுங்குகிறது? தன்னைச் சுற்றி, அறையைச் சுற்றி இது என்ன ஒளி. ஒளி! ஒளி! ஒளி! ஆ... இதுவென்ன அனுபவம்!

பொழுது புலர்ந்தது. கதிரவன் பூமியின் எல்லையை விட்டு ஒருமுழம் உயர்ந்துவிட்டான். சரத் கண் விழித்தான். ஒரு வேலைக்காரன் வந்து 'அன்னை அழைக்கிறார்' என்றான். பக்கத்து படுக்கையைப் பார்த்தான். அது காலி. நண்பனைப் பற்றி நேற்றே மறந்தாய்விட்டது. 'அவன் என்ன ஆனான்? படுத்தானா? எப்பொழுது எழுந்தான்? எங்கு சென்றான்? யாருக்குத் தெரியும்? அவன் எக்கேடுகெட்டுப் போகட்டும். நமது சின்மயி அன்னையைக் கேலி செய்தான் அல்லவா!' என்று தோன்றியது.

அவசரமாகப் படுக்கையில் இருந்து எழுந்து எதிரில் உள்ள குளத்தில் நீராடி, நித்யகர்மங்களை முடித்து, அஞ்சலிக்கு நிறைய ரோஜாப் புஷ்பங்களுடன் அன்னை ஸந்நிதிக்கு எதிரில் வரும்போது, அங்கு அவன் கண்ட காட்சி என்ன? சின்மயி அன்னை பத்மாஸனத்தில் அமர்ந்திருக்க, அவள் காலடியில் நாஸ்திக நண்பன் விழுந்து கிடக்கக் கண்டான்.

பிறகு என்ன? சின்மயியின் கருணைகடாக்ஷம் நாஸ்திகனை ஆஸ்திகனாக்கி நண்பன் சரத்துக்கு முன்னாலேயே அவனை உபதேசம் பெறச் செய்தது என்பதையும், அந்த சின்மயி ஜகத் ஜனனி பவதாரிணிதான் என்று ஐயம்திரிபற சரத் உணர்ந்ததையும், பிறகு வேலை, குடும்பம் எல்லாம் துறந்து சன்னியாசியானதும் அன்னையின் பாத சேவையே குறிக்கோளாக ஆக சரத்தும் நண்பனும் வாழ்க்கையைக் கழித்ததும் எழுதவும் வேண்டுமோ?



நல்லவன் என்றபெயர், செல்வத்தைக் காட்டிலும் மேலானது. —பர்கர்

பிறருக்கு உதவி செய்யாதவர்கள் பிறர் உதவியை எதிர்பார்க்க முடியாது. —ஈசாப்

மனிதனின் அதிர்ஷ்டம் அவன் தலைவிதியில் இல்லை. அவன் நடத்தையில்தான் இருக்கிறது. — இங்கர்சால்

எவனால் உலகிற்கு நன்மை இல்லையோ அவன் தூக்குத் தண்டனைக்குரியவன். — வால்டேர்

# சுவாமி விவேகானந்தரின் கடிதங்கள்

தமிழாக்கம்: சுவாமி கருணானந்தர்

## 1

திரு அளசிங்கப்பெருமாள்

சிகாகோ
2 நவம்பர், 1893

அன்பார்ந்த அளசிங்கரே,

பாஸ்டன் அருகில் ஒரு சிற்றூர். அங்கே டாக்டர் ரைட் என்பவருக்கு அறிமுகம் ஆனேன். ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் அவர் கிரேக்கப் பேராசிரியர். அவர் என்மீது மிகுந்த கருணை கூர்ந்தார். சமயப்பேரவையில் நான் பங்கு கொள்வது அவசியம் என்று வலியுறுத்தினர். அதன்மூலமாக நாட்டு மக்களுக்கு நான் அறிமுகம் ஆவேன் எனக் கருதினர். அனைத்து ஏற்பாடுகளையும் அவரே செய்வதற்கு முன் வந்தார்.

சிகாகோவில் கலைக்கூடம் என்ற கட்டிடத்தில் சமயப் பேரவையின் முதல் நாள் கூடினேம். பலநாட்டவர் அங்கே கூடியிருந்தனர். பிரம்ம சமாஜ மஜும்தார், பம்பாய் நகர்க்கார், ஜைன பிரதிநிதி காந்தி, பிரம்ம ஞான சங்கத்தின் அன்னி பெஸண்ட், சக்கரவர்த்தி ஆகியோர் இந்தியாவிலிருந்து வந்திருந்தனர். ஊர்வலத்தின் பின்னர், எங்களை மேடைக்கு அழைத்துச்சென்றனர். கீழே—பெரிய கூடத்தில் பண்புமிகு ஏழாயிரம் மக்கள். மேடையில் அனைத்து நாட்டினையும் சார்ந்த கற்றுணர்ந்த அறிஞர்கள். பொதுக்கூட்டத்தில் பேசியறியாத நான் இவ்வரங்கில் பேசுவதாம்! இசை முழக்கோடு அவை தொடங்கியது. பிரதிநிதிகள் ஒவ்வொருவராக அறிமுகம் செய்விக்கப்பட, அவரவர் முன்வந்து பேசினர். எனது இதயம் படபடத்தது. நா உலர்ந்து போயிற்று. காலையில் நான் பேசுவதற்கு தைரியம் வரவில்லை.

மஜும்தார் இனிதாக உரையாற்றினர். அதனிலும் மேலாக சக்கரவர்த்தி பேசினர். அதற்காகப் பாராட்டுதல் பெற்றனர்கள். உரையாற்றுவதற்கு ஆயத்தமாக அவர்கள் வந்திருந்தனர். நானேர் முட்டாள்; உரை எதுவும் தயாரிக்கவில்லை. ஆயினும் அன்னை ஸரஸ்வதியை வணங்கி மேடையில் முன் வந்தேன். டாக்டர் பாரோஸ் அறிமுகம் செய்துவைத்தார். அவையோரை நோக்கி, ''அமெரிக்கச் சோதரிகளே; சோதரர்களே'' என்று எனது உரையைத் தொடங்கினேன். உடனே இரண்டு நிமிடநேரம் காது செவிடுபடும் வண்ணம் கையொலி எழுந்தது. பின்னர் எனது உரையை நிகழ்த்தினேன். அது முடிந்ததும் களைத்து அமர்ந்தேன். மறு தினம் அனைத்துப் பத்திரிகைகளும் எனது உரையே மிகச்சிறப்பாக இருந்தது என அறிவித்தன.

மூகம் கரோதி வாசாலம் (ஊமையை சொல் வலன் ஆக்குவான் இறைவன்) என ஸ்ரீதர சுவாமிகள் கூறியுள்ளது சத்திய வாக்கு. இறைவனின் திருப்பெயர் வாழ்க! அன்று தொடங்கி நான் நாடறிந்தோன் ஆகி உள்ளேன். ஹிந்து தர்மத்தைப்பற்றிய எனது கட்டுரையை சமயப் பேரவையில் நான் படித்த அன்று, என்றுமில்லாதவாறு அவைக்கூடம் நிரம்பி நின்றது. பத்திரிகை ஒன்று கூறுகிறது — ''விவேகானந்தரின் உரையைக் கேட்பதற்காக, அவரது முறை வருவதற்காக நீண்டநேரம் மக்கள் காத்து நின்றனர்.'' பத்திரிகைச் செய்திகளையெல்லாம் சேகரித்து அனுப்பிவைப்பேனுகில் நீங்கள் வியப்பு மிக அடைவீர்கள். ஆனுல் நான் புகழை வெறுக்கின்றேன்; இதை நீர் அறிவீர். இந்நாட்டின் அன்பை எவ்வாறு விரித்துரைப்பேன்! இந்நகரின் இனிய இல்லங்கள் பல என்னை வரவேற்கக்காத்துள்ளன. ஆழ்ந்த (தத்துவ) செய்திகளை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் மிக்கவர் இந்நாட்டு மக்கள். இத்தகைய ஆவலை வேறு எங்குமே காண இயலாது.

கொள்கை ஒன்றினிடத்துப் பெரும் ஈடுபாடு கொண்டோர் ஒவ்வொருவரும் இந்நாட்டிற்கு வந்து, பிரசாரம் செய்ய விரும்புகின்றனர். ஆனுல் பெரும்பாலான கருத்துக்கள் அறிவுக்குப் பொருந்தாதன. எனது கொள்கையை சுருக்கமாகக் கூறுகின்றேன். ஆசியாவிலே தான் நாகரிகம் தொடங்கியது; மனிதனின் வளர்ச்சியை ஐரோப்பா தந்தது; மகளிர், பாமரர் முன்னேற்றத்திற்கு அமெரிக்கா பாடுபடுகின்றது. ஹிந்துக்கள் தமது பெருமைக்குரியதாகக் கருதுகின்ற ஆன்மிகப் பண்பு அமெ

ரிக்கச் சமுதாயத்தில் வளர்ந்து வருகின்றது. ஹிந்து ஒருவன் தனது சமய ஒழுங்கினை விடுத்து நீங்குதல் கூடாது. ஆனால் சமயப் பண்பாடு ஒரு வரம்பிற்குள் நிற்றல் வேண்டும். சமுதாய வளர்ச்சிக்கு முழு உரிமை தரப்படவேண்டும். இந்திய சீர்திருத்தவாதிகள் அனைவரும் ஒரு பெரும் தவற்றிற்கு உள்ளாகினர். புரோகிதத் தொழிலின் கொடுமைகள் அனைத்திற்கும், தாழ்வு அனைத்திற்கும், சமயமே பொறுப்பு எனக் கருதினார்கள். உடனே சமயத்தைத் தகர்க்கப் புறப்பட்டார்கள். புத்தர் தொடங்கி, ராம் மோஹனர் வரை ஜாதி பேதத்திற்கு சமயமே அடிப்படையாக உள்ளது என்று கருதினார்கள். ஆகையால் சமயம், ஜாதி இரண்டையும் தகர்க்க முனைந்தார்கள். விளைவு தோல்வியே!

புரோகிதர்கள் வெறும் பிதற்றலே! ஜாதி யமைப்பு ஒரு சமுதாய ஏற்பாடேயாகும். அந்த ஏற்பாட்டின் நோக்கம் முடிந்துவிட்டது. சமுதாயத்தில் நான் ஓர் உறுப்பினன் என்ற ஸ்தானத்தை மக்கள் இழந்துள்ளனர். இந்த ஸ்தானத்தை நாம் மீண்டும் தந்தே ஆக வேண்டும். அதுவே தீய நாற்றத்தைப் போக்க வழி. எது வளர்ச்சியைத் தரும்? சுதந்தரமே! புதிய மறுமலர்ச்சி தோன்றியது முதல் ஜாதியமைப்பு வலிவிழப்பதை நீங்கள் பார்க்கின்றீர்கள். அதை வீழ்த்த, இனி சமயத்தின் துணை தேவை இல்லை. இன்றைய அரசின் கீழ், ஒரு மனிதன் எந்த ஒரு தொழிலையும் செய்யலாம்; தடை இல்லை. இதனால் சோம்பிக்கிடந்த மக்கள் பிறவியின் பயனை, உன்னத நிலையைத் தேடத் தொடங்கி உள்ளவர்; வெற்றியும் பெறுகின்றனர்.

இறைவன் என்னோடு உள்ளார். இதை ஒவ்வொருநாளும் உணர்கின்றேன். அவரது ஆணைப்படி நடப்பதே எனது முயற்சி. உலக நலத்திற்காக உழைப்போம்; நமது பெயர் புகழுக்காக அல்ல. விவாதம் செய்வதல்ல நமது நோக்கம். நமது கடமை — உழைத்து உழைத்துச் சாதலே. இதய மலர்ச்சியுடன் விளங்குவீர். பெரும்பணி செய்ய இறைவன் நம்மைத் தேர்ந்தெடுத்துள்ளான். பெரும் பணிகளை நாம் ஆற்றியே தீருவோம். ஆயத்தமாகி நிற்பீர். அவ்வப்போது முகவை மன்னர், மற்றும் நண்பர்களைச் சென்று காண்பீர். இந்தியப் பாமர மக்களிடம் அவர்கள் அனுதாபம் கொள்ளத் தூண்டுக. அச்சம் தவிர்த்து நிற்பீர். கடவுளின் துணை உமக்கு உண்டு. இந்திய இளவரசரில் பலரையும்விட, இந்திய இளைஞர்கள் பலரையும் விட இந்நாட்டு இரயில்வே கூலியொருவன் மிகுதியாகக் கல்வி கற்றுள்ளான். அதே கல்வியை நாம் ஏன் பெற இயலாது? நாம் கற்றே ஆக வேண்டும்.

நீங்கள் ஏழை என எண்ணுதல் வேண்டா. வலிமை தருவது செல்வம் அல்ல. நல் இயல்பே வலிமை; உலகம் கண்ட உண்மை இதுவே.

அன்புடன்

**விவேகானந்தா.**

**2**

**திரு அளசிங்கப்பெருமாள்**

நியூயார்க்

*23 ஜனவரி 1896*

அன்ப,

உனக்குத் தெளிவாகக் கூறுகிறேன்; யார் என்னைப் பின்தொடரவேண்டும் தெரியுமா? உயிர் உள்ள வரையில் உண்மையுடன் ஒழுகுபவனே — விஸ்வாசமுள்ளவனே — என்னைப் பின்தொடரவேண்டும். வெற்றியோ தோல்வியோ எனக்குக் கவலையில்லை; எனது இயக்கத்தை உன்னதமானதாக வைத்திருக்கவேண்டும்.

ஆற்றவேண்டியுள்ள பணி மிகக் கடினமானது; பொறுமையோடிரு. நீ எதிர்பார்ப்பதை விட நல்ல விளைச்சலைக் காண்பாய். வெற்றியடைவதற்குமுன் ஒவ்வொரு பணியும் நூற்றுக்கணக்கான துயரங்களைத் தாண்டியாக வேண்டும். ஹிந்து சமயக் கருத்துக்களை, வறட்சியான தரிசன சாஸ்திரத்தை, சிக்கல் மிகுந்த புராணக்கதையை, வியப்பிற்குரிய மனோதத்துவ விஞ்ஞானத்தை, எளிதாக இயல்பான நடையில், பாமர மக்களின் — உள்ளம் கவர்வதாய், அதேபோழ்து மிக உயர்ந்த உள்ளம் படைத்தோரின் தேவைகளை நிறைவு செய்ய வல்லதாய் உள்ள ஒரு சமய தர்மத்தை ஆக்கி அமைப்பதென்பது மிகவும் கடினம்.

மிக நுண்ணிய ஆழ்ந்த அத்வைத தத்துவம், அன்றாட வாழ்க்கையில் பயன்படுமாறு உயிர்ச் சக்தி ததும்புவதும் கவித்வம் நிறைந்ததும் ஆக வேண்டும். சிக்கலான புராணக்கதை, யாவரும் உணரக்கூடிய அறவொழுக்க வாழ்க்கையை வெளிப்படுத்த வேண்டும். மூளையைக் குழப்புகிற யோக சாஸ்த்ரம் விஞ்ஞான முறைக்கு

ஏற்றதாய் நடைமுறையில் பயன்படக்கூடிய தாய் வெளிப்படவேண்டும். மேலும் சிறு குழந் தைகூட புரிந்துகொள்கின்ற வகையில் இவற் றை எல்லாம் எடுத்தியம்ப வேண்டும். இதுவே என் பணி. நான் எவ்வளவு வெற்றி பெறு வேன் என்பதை இறைவனே அறிவார். நம் கடன் பணி செய்தலே.

அன்பு—ஆசியுடன்
விவேகானந்தா

## 3

**திருமதி புல் அம்மையார்**

லண்டன்
*30 மே 1896*

பேராசிரியர் மாக்ஸ்முல்லரைப் பார்த்துப் பேசினேன்; நல்ல சந்திப்பு. அவர் முனிவரைப் போன்றவர். எழுபது வயதினர். இளைஞர் போன்று உள்ளார். இந்தியாவினிடத்தும் வேதாந்தத்திலும் அவருக்கு உள்ள ஈடுபாட் டிலே, பாதி எனக்கு இராதா என நான் ஏங்கு கிறேன். யோக மார்க்கத்திலும் அவர் ஈடு பாடு உடையவர்.

யாவற்றுக்கும் மேலாக, இராமகிருஷ்ண பரம ஹம்ஸரிடத்து அவர் கொண்டுள்ள பக்தி—விசு வாசம் அளவிடற்கரியது. Ninteenth Century என்ற பத்திரிகையிலே அவர் பரமஹம்ஸரைப் பற்றிக் கட்டுரை ஒன்று வரைந்திருக்கிறார். ''இராமகிருஷ்ணரை உலகு அறியுமாறுசெய்ய, நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?''—என்று அவர் என்னை உலுக்குகிறார். இராம கிருஷ்ணர் பல ஆண்டுகளாக அவரது உள்ளத் தைக் கவர்ந்துள்ளார். இது நல்ல செய்தி அன்றோ!

அன்புடன்
விவேகானந்தா

## 4

**திருமதி மேரி ஹேல்**

லண்டன்
*30 மே 1896*

அன்பார்ந்த சகோதரி,

புதிய ஒன்றை—முற்றிலும் புதிய ஒன்றை—எளிமை திகழ்வதாய்—வலிவு உள்ளதாய்—புத்தம் புதியதாய் அப்போதுதான் பிறந்த குழந்தை போன்று நவீனமானதாய்—உள்ள ஒன்றைத் தொடங்குவதற்கே நான் இந்தியா செல்கி றேன். சனாதனமானது, எல்லையில்லாதது; எங்கும் பரவி நிற்பது; யாவற்றையும் அறியக் கூடியது; தத்துவ மாத்திரமானது; வியக்தி ரூபமானது அல்ல. நீயும் நானும் மற்ற அனை வரும் அந்தத் தத்துவத்தின் ப்ரதிரூபங்களே ஆவோம். இந்த முடிவற்ற தத்துவம் மிகுதி யான அளவுக்கு ஒரு ஜீவ வியக்தியினிடத்துப் பிரதிபலிக்கப்படுமேயானால், அந்த ஜீவன் அதிகச் சிறப்பு மிக்கது ஆகின்றது. இறுதியில் எல்லோருமே அந்தத் தத்துவத்தின் பரிபூரணப் பிரதிமூர்த்திகள் ஆகிவிடுவர். இவ்வாறு அனை வரும் ஒன்றாகிவிடுவர். சுயரூபத்தில் இப் பொழுதே எல்லோரும் ஒன்றுதான். சமய தர்மம் என்பதெல்லாம் இதுதான். இந்த ஒற்றுமை உணர்ச்சி—அதாவது அன்பு என்பதன் மூலந்தான் அதைச் சாதனை செய்தல் வேண்டும்.

பழைய முறைகள் யாவும் பழைய மூட நம்பிக்கைகளேயாகும்—வேறு ஒன்றுமல்ல. இனி அவற்றை உயிர்பெறுமாறு செய்யப் போராடு வதில் என்ன பயன் உண்டு? உயிரும் உண்மை யும் ஆகிய நதி அருகில் பெருகி ஓடும்போது, தாகம் கொண்ட மக்களுக்குச் சாக்கடைத் தண்ணீரைக் குடிப்பதற்குத் தருவது ஏனோ? இது மானிடச் சுயநலமே அன்றி வேறென்ன?

அன்புடன்
விவேகானந்தா



உடலை அடக்கி, நாக்கை அடக்கி, மனதையும் அடக்கியுள்ள அறிவாளிகளே உண்மை யான நல்லடக்கம் உள்ளவர்கள். — **புத்தர்**

**ம**யக்கம் தெளிந்தால் மட்டுமே அலைமோதும் மனம் அமைதியுறும். பொருள்களில் உள்ள பற்று நீங்க வேண்டுமானால் நல்லோர் உறவு வேண்டும். — **ஆதிசங்கரர்**

**ம**னித வாழ்க்கை என்னும் யாத்திரையில், நூல்களும் நம்மை வழிநடத்தும் ஒரு துணையாகும். எனவே நல்ல நூல்களுடன் உறவுகொள்ளாத புத்திசாலிகளைக் கண்டு நான் வருந்துகிறேன். — **மோங்தேன்**

# ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கமும் வ. உ. சியும்

பெ. சு. மணி

கப்பலோட்டிய தமிழன் என்று தமிழகம் கொண்டாடும் வ. உ. சிதம்பரம்பிள்ளை காலத்தில் ஆன்மிக எழுச்சி, அரசியல் விடுதலை வேள்வியில் சொரியும் நெய்யெனப் பயன்படுத்தப்பட்டது. 'தேசபக்த மெய்ஞ்ஞானி' என்று கொண்டாடப்பெறும் சுவாமி விவேகானந்தரது வேதாந்தப் பிரசாரத்தை, ''தேச பக்தி முயற்சிக்குத் தாய் முயற்சியாக'' வருணித்தவர் பாரதியார்.

பாரதியார்—வ. உ. சி.—சுப்ரமண்ய சிவா ஆகிய முப்பெரும் தேச பக்த சான்றோர்களுமே சுவாமிஜியின் ஆன்மிக இயக்கத்தால்தான் ஈர்ப்புண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

'அறிஞரோடு நட்புச் செய்தலும் அருள்; அறிவிலார்க்கு அறிவை அளித்தலும் அருள்; கடவுளை உய்த்து உணரும் ஞானிகளுக்கு உதவிகள் செய்வதும் அருள்' என்று வ. உ. சி. தமது 'மெய்யறிவு' என்னும் கவிதை நூலில் கூறுகிறார்.

சொல்லுக்கேற்ப வாழ்வை அமைத்துக் கொண்டவர், வ. உ. சி. இளம் வயதில் 'தெய்வப் பேரவையில்' பங்கு கொண்டு, சிவ நெறிபெருக்கும் சிலராய்த் திகழ்ந்தார். வள்ளி நாயகம் என்னும் துறவியிடம் ''கைவல்லியம்'' ''விசார சாகரம்'' என்னும் மெய்ப்பொருள் விளக்க நூல்களைக் கற்றுத் தெளிந்ததைத் தமது சுயசரிதையில் குறிப்பிடுகிறார் வ. உ. சி.

'வேதாந்தப் பிரசாரத்தில் புது நோக்கும்' செயல்முறையும் படர்ந்து மேவ, வழிவகுத்த ஸ்ரீராமகிருஷ்ணர் இயக்கம், விடுதலை வீரர் வ. உ. சி.யைக் கவர்ந்தது இயல்பானதே.

சென்னையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இயக்கம் முளைத்தெழுந்து ஆன்மிக வேட்கை கொண்டோருக்குத் 'தரு நிழலாய்' அமைய அருள் தொண்டு சிறக்கப் பாடுபட்டவர் சுவாமி இராமகிருஷ்ணானந்தர்; சுவாமி விவேகானந்தரால் சென்னைக்கு என்று தேர்ந்தெடுத்து அனுப்பப் பட்டவர்.

சுவாமி இராமகிருஷ்ணானந்தரைக் கண்டு நல்லுரைகேட்டுச் செயல்முறை வேதாந்தத்தின் நற்செய்தியைத் தெளிந்தார் சிதம்பரனார். வேதாந்தத்தில் இடம் பெற்றுள்ள மாயா



சுவாமி இராமகிருஷ்ணானந்தர்

தத்துவத்தைப் புரிந்துகொள்ளாத நிலையில், தாம் விடுத்த வினாவையும், இராமகிருஷ்ணானந்தர் அளித்த விடையையும் தமது சுயசரிதையில் விளக்கமாக அமைத்துத் தந்துள்ளார். வ. உ. சி.

''பெரிய அத்தையுடன் சென்னையில் இராமகிருஷ்ணானந்தரைக் கண்டேன். 'சுதேசியம் பரவிவரும் இப்பூமியில் கைத்தொழில் வளர்க்க எத்தகைய முயற்சி செய்தாய்' என அவர் கேட்டார்.

'இவ்வுலகமோ, கனவாகும். இதைப்பற்றிய நினைவு எதற்கு? நெடிய முயற்சி ஆற்றுவதற்கு என்ன இருக்கிறது? கீழ்கோடோ, மேல் கோடோ உயர்ந்தால் என்ன? 'வாழ்வும்—தாழ்வும் மாயையின் விளையாட்டல்லவோ?' என்று பதில் அளித்தேன்.''

'சக்தி பரவட்டும்' என்று முழங்கிய செயல்முறை வேதாந்த விற்பன்னர் விவேகானந்தரின் சகோதரத் துறவியார் இராமகிருஷ்ணானந்தர், வ. உ. சி.யின் விடையில் பொதிந்துள்ள

மாயை பற்றிய ஐயத்தைப் போக்கியும், நடைமுறை வாழ்க்கையில் வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்டு வ. உ. சி. வாழ வேண்டிய முறையை எடுத்துக் காட்டியதையும், சிதம்பரனுர் அதனைக் கருத்தோடு ஏற்றுப் போற்றியதையும் வ. உ. சி.யின் சுயசரிதையில் விரிவாகக் காண்கிருேம்.

"சுதேசியம் ஒன்றே சுகம்பல அளிக்கும். இதே என் கடைப்பிடி என்றனன். அவனுரை வித்தென விழுந்தது. மெல்லிய என்னுளம் சித்தம் அதனைச் சிதையாது வைத்தது!''

இராமகிருஷ்ணனந்தர் இயம்பிய விழுமிய உரை வ. உ. சியின் உள்ளத்தில் 'வித்தாக' விழுந்ததாம். 'வந்தே மாதரம்' பிள்ளையாக வ.உ.சி. பூத்துக் குலுங்கிப் பெரும் புகழ்பெற 'அந்த வித்து' விளைவித்த வித்தகத்தை வர லாறு கூறுகிறதல்லவா?

இராமகிருஷ்ணர் இயக்கத்தின் முதல் சந்திப் பிலேயே ஆன்மிகம் கலந்த தேசிய வீறு ஒளி வீச விடுதலைப் போர்க்களத்திலே அடியெடுத்து வைத்தார் வ. உ. சி.

இராமகிருஷ்ணனந்தர் விதைத்த வித்து தமது உள்ளத்தில் வேர் பிடித்து, வளரும் செடியில் இரு வண்ணத் தளிர்களாகத் 'தூத் துக்குடி கைத்தொழில் சங்கமும்', 'தரும சங்க' மும் மிளிர்ந்தன என வருணிக்கிருர் வ.உ.சி.

இராமகிருஷ்ணனந்தரைத் தொடர்ந்து சுவாமி அபேதானந்தர் சிதம்பரனுரை ஆட் கொள்கிருர். இதுவரை வெளிவந்துள்ள வ. உ. சி. வரலாற்றில் சுவாமி அபேதானந் தருக்குத் தூத்துக்குடியில் சிதம்பரம் பிள்ளை புதுமையாக அளித்த வரவேற்பு பாங்குறப் பொறிக்கப்படவில்லை. ''சுவாமி அபேதானந் தரின் பேருரைகள்'' என்னும் ஆங்கில நூலில் இருந்து எடுக்கப்பட்ட பின்வரும் செய்தி வ. உ. சி. அன்பர்களின் சிந்தையைக் குளிர் விக்கும் செய்தியாகும்.

''1906-ல் சுவாமி அபேதானந்தர் பாரதத் திற்குத் திரும்புகையில், தமிழகத்தில் பல்வேறு நகரங்களில் ஆர்வப் பெருக்கோடு வரவேற்கப் பட்டார். 1906 ஜூன் 29-ஆம் தேதியன்று இலங்கையில் இருந்து தூத்துக்குடியில் வந்தி றங்கினர். சிதம்பரனுரும், மற்றும் பல தூத் துக்குடி பிரமுகர்களும் நீராவிப் படகில் ஏறி அபேதானந்தர் வந்த கப்பலை அணுகினர். சுவாமி அபேதானந்தரையும், அவரது குழு



சுவாமி அபேதானந்தர்

வினரையும் சிதம்பரனுர் நீராவிப் படகில் உடனழைத்துக்கொண்டு கரை சேர்ந்தார்.''

மாபெரும் வரவேற்பில் புதுமை யொன்று பொலிந்த காட்சி, பின்வருமாறு வருணிக்கப் படுகிறது.

''ஊர்வலத்தில் கவர்ச்சிமிக்க காட்சி யொன்று இருந்தது. விசேஷமான சீருடை அணிந்த சுதேசி கட்சியினர் எடுத்து வைத்த ஒவ்வொரு அடியோடும் 'வந்தே மாதரம்' என முழங்கினர். தேசியக்கொடி அசைய உள்ளூர் மங்கல இசை தவழ்ந்தது.''

சுவாமி அபேதானந்தருடன் சுவாமி இராம கிருஷ்ணனந்தரும், விவேகானந்தரின் சீட ராகிய சுவாமி பரமானந்தரும் வரவேற்கப் பட்டனர். இந்த நிகழ்ச்சிக்குப் பதினெட்டுத் திங்களுக்கு முன்பாக சுவாமி இராமகிருஷ்ண னந்தர் தூத்துக்குடியில் வேதாந்த மெய்ப் பொருளை விளக்கி ஆற்றிய சொற்பொழிவு, வரவேற்புரையில் நினைவு கூறப்பட்டது.

ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் முதல் தலைவ ராக விளங்கியவர் சுவாமி பிரம்மானந்தர். சுவாமி அபேதானந்தரையும் சுவாமி பிரம்மா னந்தரையும் தமது வாழ்வில் சந்திக்க நேர்ந்த பாக்கியத்தை, 'சிரிளவேனில்', 'தென்றல்'

என்று தமது சுயசரிதையில் குறிப்பிடுகிறார் வ. உ. சி.

''வானில் ஒளிரும் மதியென விளங்கி
வானுறத் திசையுற வளர்ந்து பரந்து,
தபோதன ராகித் தாரணி அளிக்கும்
**அபேதா னந்தன் பிரமானந்தனும்**
**சீரிள வேனிலும் தென்றலும்** வந்தன.''

ம. பொ. சி. அவர்கள் தமது நூலில் வ. உ. சியின் வேதாந்த–சித்தாந்தக் கண்ணோட்டத்தைப் பின்வருமாறு விளக்குகிறார் :

''தமிழகத்தில் தோன்றிய அரசியல் தலைவர்களிலே தலைசிறந்து விளங்கிய சிதம்பரனார், சித்தாந்த வேதாந்த சாத்திரங்களை ஐயந்திரிபறக் கற்றறிந்தவர். சைவ சித்தாந்த சாத்திரங்களில் தலைசிறந்து விளங்கும் சிவஞான போதத்தையும், வேதாந்த சாத்திரங்களில் தலையாயதென்று அவர் கருதிய 'கைவல்ய நவநீதத்'தையும் கசடறக் கற்றிருந்தார்.

''சிவஞான போதத்திற்கு சுபக்கத்திற்கு மட்டுமே, சிதம்பரனார் உரை இயற்றினார். 'சுபக்கம்' என்பது தமது கட்சியை நிறுவுவது; 'பரபக்கம்' என்பது மாற்றுக் கொள்கையினரைக் கண்டிப்பது. சிவஞான போதத்தின் பரபக்கத்தில் வேதாந்த சாத்திரம் இயல்பாகவே கண்டனத்திற்கு உரியதாகிறது. சிதம்பரச் செம்மலோ வேதாந்த சித்தாந்த சமரச நோக்குடையவர். எனவே 'பரபக்கம்' கூறாது விடுத்தார். இதற்குரிய காரணத்தை உரைப்பாயிரத்தில் இயம்புகிறார்.

''இவ்வுரையில் ஏனைய உரைகளில் காணப்படும் பல கோட்பாடுகளும், அவற்றின் கண்டனங்களும் காணப்படா. அவை காணப்படாமைக்குக் காரணம் மக்கள் பல்வேறு பெயர்களோடும், வடிவுகளோடும் காணப்படினும் அவர்களெல்லாம் மக்கட் சாதியினரேயாவது போல, மதங்கள் பலவேறு பெயர்களோடும் கொள்கைகளோடும் காணப்படினும், அவைகளெல்லாம் ஒப்புயர்வற்ற ஒரே இறைவனைப் பற்றியே பேசுகின்றன என்று யான் கருதுகின்றமையே.''

மேலும் தொடர்ந்து வேதாந்த – சித்தாந்த ஒற்றுமையைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

''சிவஞான போதத்தை யான் ஆராய்ச்சி செய்ததில் எனக்குக் கிடைத்த பலன், சித்தாந்தமும் வேதாந்தமும் ஒன்றே என்ற எனது கொள்கை உறுதியடைந்தது.''

இராமகிருஷ்ணர் இயக்கம், அனைத்து மதக் கோட்டுபாடுகளையும் வேதாந்தத்தோடு தொடர்புபடுத்தி பிணக்குகளைத் தவிர்த்து இணக்கம் செழிப்புறப் பாடுபட்டு வருகிறதல்லவா? இதன் எதிரொலி வ. உ. சியின் மெய்ப்பொருள் நோக்கிலும் மிளிர்கிறது.




## SRI RAMAKRISHNA VIJAYAM

**Form IV**

(*See Rule* 8)

Statement about ownership and other particulars about Sri Ramakrishna Vijayam (according to Form IV, Rule 8, circulated by the Registrar of Newspapers for India):

| | | |
|---|---|---|
| 1. | *Place of Publication* .. | Madras–600 004 |
| 2. | *Periodicity of its Publication* .. | Monthly |
| 3. | *Printer's Name* .. | S. Ramaswamy |
| | *Nationality* | Indian |
| | *Address* | Rajsri Printers<br>97 Lloyds Road, Madras–600086 |
| 4. | *Publisher's Name* .. | Swami Chidghanananda |
| | *Nationality* | Indian (Hindu Monk) |
| | *Address* | Sri Ramakrishna Math<br>Mylapore, Madras–600004 |
| 5. | *Editor's Name* .. | Swami Chidghanananda |
| | *Nationality* | Indian (Hindu Monk) |
| | *Address* | Sri Ramakrishna Math,<br>Mylapore, Madras–600004 |
| 6. | *Name & address of individuals who own the newspaper and partners or shareholders holding more than* 1% *of the total capital* .. | Sri Ramakrishna Math<br>Mylapore, Madras–600004 |

I, Swami Chidghanananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

(Sd.) **Swami Chidghanananda**
*Signature of the Publisher*

Date: 1-3-1977

# பரமார்த்தப் பிரசங்கம்

சுவாமி விரஜானந்தர்

251. **ஸ்ரீ** கிருஷ்ணருடைய அவதார தத்துவத்திற்குச் சிறந்த சான்று ஆவது, அவருடைய பிருந்தாவன லீலையேயாகும். ஏனென்றால் அந்த லீலையில்தான் அவர் தம்முடைய சொல்லற்கரிய பிரேமையின் சாரத்தை வெளிக்காட்டியிருக்கிறார். சுத்த அன்பும், பிரேமையும் பகவானை எந்த அளவுக்கு பக்தனைச் சார்ந்தவராகப் பண்ணிவிடும் என்பதும், எந்தப் பேரளவுக்கு பக்தனை ஆண்டவன் தமக்குரியவனாகச் செய்துகொள்ளுவார் என்பதும், அவருடைய பிருந்தாவன லீலையினின்றும் நன்றாக அறியக் கிடக்கிறது. நம்முடைய அறிவுக்கும் புத்திக்கும் எட்டாததான பிரேமைச் சிகரத்தை அந்த லீலையிலே அவர் உலகத்தினருக்கு எடுத்துக்காட்டியிருக்கிறார். அந்த உன்னத பிரேமையினால் வசீகரிக்கப்பட்டவர்களாய் வ்ரஜாவின் (பிருந்தாவனத்தின்) கோபி மங்கையர் (பாற்காரப் பெண்மணிகள்) வெறிபிடித்தவர் போன்று யமுனா தீரத்திற்கு ஓடுவர். கண்ணனுடைய குழலோசையைக் கேட்டதும், அவரைக் காணவும் அவர் அருகில் இருக்கவும் வேட்கையுற்று அவர்கள் அந்த நதிக்கரைக்கு விரைவர். லஜ்ஜை, பயம், குலப்பெருமை, சமுதாய அந்தஸ்து ஆகிய உணர்வையெல்லாம் உதறிவிட்டு, கோபியர், கிருஷ்ணருடைய சங்க பாக்கியத்தில் தம்முடைய தன்னுணர்ச்சியையும் தேக புத்தியையும் நழுவவிட்டவர்களாய், ஸ்ரீகிருஷ்ணரிடம் லயமாகிவிடுவர். அத்தகைய சுயசிந்தையே அற்றதான அன்பை ஒரு மனிதனால் சுரக்க வைக்க முடியாது. பகவான் ஒருவருக்கே அது கூடும். பிருந்தாவன லீலை அபூர்வமானதொரு நித்திய லீலை. எப்பொழுதும் அனுபவிக்கக்கூடிய லீலை. அந்த அனுபவம் இனிமை நிறைந்த அத்தியாத்தும ஊக்கம் ஊட்டுவது. பல நூற்றாண்டுகளாக அந்த லீலையின் மகத்துவம் எண்ணிறந்த ஆடவர் மாதருடைய உள்ளங்களை இறைவன்பால் ஈர்த்து வந்துள்ளது. அவர்களுடைய வாழ்க்கையில் சாந்தியையும் ஆனந்தத்தையும் பொழிந்து வந்துள்ளது. பிருந்தாவன பாலனை இஷ்ட தெய்வமாக வழிபடுவதன் மூலம் அவர்கள் மோட்சத்திற்கு அதிகாரிகளாகி வந்துள்ளனர், கண்ணன் வாழ்ந்த யுகத்திற்கு நீண்ட காலத்திற்குப் பின்னர் மகாப் பிரபுவான ஸ்ரீசைதன்னியதேவர் அந்தப் பிரேமைத் தத்துவத்தையே புதுப்பிப்பதற்காக அவதாரமெடுத்து வந்தார். அவர், மகாபாவ மெனும் அதி உயர்ந்த நிலையில் லயித்துப் போயிருந்தார். மகாபாவம் சமாதியின் அதி உன்னதமான ஆனந்த நிலை. ராதையுடன் ஸ்ரீ கிருஷ்ணர் பண்ணிய இன்ப லீலையை நினைந்து நினைந்து சைதன்னியர் அவ்வித சமாதியில் ஆழ்ந்தார். பிரதான கோபியான ராதைக்கும் கிருஷ்ணருக்கும் இடையே பரிமளித்த பிரேமை, காமத்தின் லேசான வாசனையும் அற்றது. உலகில் இருந்த அனைவருக்கும் ஸ்ரீசைதன்னியர் தங்கு தடையின்றி அந்தத் திவ்வியப் பிரேமையையும் சுத்த பக்தியையும் பரப்பியருளினர். நம் தலைமுறையினர் வாழ்ந்துள்ள இந்த நாளிலேயேகூட, ஸ்ரீராமகிருஷ்ணர் ராதா-கிருஷ்ணருடைய லீலையைப் பற்றிப் பாடும்பொழுதும் பேசும்பொழுதும் பரவசப்பட்டு மகாபாவத்தில் மூழ்கிப்போவாராம். அச்சமயங்களிலே ஸ்ரீ ராதையிடமும் ஸ்ரீசைதன்னிய தேவரிடமும் மட்டுமே காணப்பட்ட எட்டுவிதப் புறச் சின்னங்கள் கொண்ட வெகு அருமையான திவ்விய உணர்வுகள் யாவும் ஸ்ரீராமகிருஷ்ணருடைய சரீரத்திலும் தோன்றுமாம்.

252. **ஒ**ருவன் எதைப் பெற்றுள்ளானோ அதை மட்டுமேதானே தியாகம் செய்யக்கூடும்? தன்னிடம் இல்லாத ஒன்றை ஒருவன் எவ்வாறு தியாகம் பண்ணமுடியும்? ஒரு பொருளைத் துறக்கவேண்டுமானால் அதை முதலில் சம்பாதிக்கவல்லவோ வேண்டும்? இதற்கான தொல்லையையோ பொறுப்பையோ ஏற்க மறுப்பது கூடாது. கூடையில் குவித்து வைத்திருந்த நெற்பொரியைக்காற்று வீசிச் சிதறடிப்பதைக் கண்ட கடைக்காரன், அதை மீட்க முடியாது என்று கண்டு அதைக் கோவிந்தனுக்கு அர்ப்பணம் செய்து புண்ணியம் சம்பாதிக்கப் பார்த்த கதை ஒன்று உண்டு. இந்த மாதிரியான நைவேத்தியம் எதற்கும் உதவாது. இன்ப நுகர்ச்சியைத் தடை செய்வதில்லை சாஸ்திரம். ''தியாகத்தின் மூலம் போகத்தைச் சுவை. அதாவது மமகார உணர்வையும் பற்றையும் தவிர்த்து விட்டு போகத்தை அனுபவி''—என்று சாஸ்திரம் கூறுகிறது. ''பிரபஞ்சத்தில் உள்ள யாவும் கடவுளால் வியாபிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பொருளையும் ஊடுருவி நிறைந்துள்ளார் இறைவன். யாவும் அவருடைய உடைமையாம். எனவே இந்த அறிவைத் திடமாகப் பற்றிக்கொண்டு, நான் எனது என்ற உணர்வைத் தவிர்த்துவிட்டு, எல்லாக் காரியங்களையும் செய்யவேண்டும். எல்லாவற்றையும் அனுபவிக்க வேண்டும். இல்லாவிடில் போகம் துர்ப்போகமாக, இன்பம் துன்பமாக மாறிவிடும்'' என்பது சாஸ்திர போதனையாகும். இந்த மனப்பான்மையுடன் உலகத்தைச் சுவைத்தோமானால் யோகம் தானே வந்து வாய்க்கும். யோக விதிகளையெல்லாம் பின்பற்றி யோக முறை

களின் மூலம் பயிலாமலேயே, தன் போக்கிலேயே யோகம் பயிலப்பட்டதாகிவிடும்.

253. இஷ்ட தேவதையை ஸ்மரணம் மனம் செய்வது (எண்ணுவது சிந்திப்பது) என்றால் மனம் அந்த தேவதையுடன் தொடர்புற்று ஐக்கியப்பட்டு நிற்குமாறு செய்வது என்று அர்த்தம். ஈசுவர சிந்தையின் போக்கு எந்த அளவுக்கு மிக ஆழ்ந்தும், விட்டுவிட்டு இல்லாது ஒரே பெருக்கமாகப் பாய்ந்து செல்லுவதாகவும் இருக்கிறதோ, அந்த அளவுக்கு அந்தக்கரணத்தை சிதறப் பண்ணுகின்ற விருத்திகள் சாந்தமுற்று அடங்கும். தைல தாரை போன்று சிந்தைப் போக்கும் கொஞ்சமும் தடைப்படாமல் பாயும். அப்பொழுதுதான் அதைத் தியானம் என்று கூறலாம். அந்தத் தியானமே இன்னமும் ஆழ்ந்ததானால், தியானிக்கப்படும் வஸ்துவுடன் மனம் ஒன்றாகிவிடுகிறது; தியான வஸ்துவின் சொரூபமே ஆகிவிடுகிறது. இந்த அவஸ்தை சமாதி எனப்படும். அந்த நிலையில்தான் ஆத்மாவின் நிஜ இயல்பு முற்றிலுமாக அனுபவிக்கப்படுகிறது. (ஸ்வ ஸ்வரூபத்தின் பூரண அனுபூதி ஏற்படுகிறது). இஷ்ட தெய்வத்தின் தரிசனம் கிடைக்கிறது. பகவான் அடையப் படுகிறார். பிரம்மசாட்சாத்காரம் பெற்றவனுக்கே இதயத்தின் முடிச்சுகள் துண்டித்தெறியப்படுகின்றன என்று உபநிஷதம் கூறும். அதாவது காமம் முதலான விபரிதங்கள் அவனுக்கு ஒழிந்து போகின்றன. எல்லா ஐயங்களும், இனி தலைதூக்காமல், கழன்று விடுகின்றன. கர்ம பலன்கள் யாவும் ஓய்ந்து போகின்றன. துக்கம் அனைத்துமே அற்றுவிடுகின்றது. ஆகவே நாம் உணரவேண்டிய விஷயம் இதுதான். பகவானை அடைவதற்கான முதற்படியாவது ஈசுவர ஸ்மரணமும் மனனமும்தான். சித்தவிருத்திகள் அடங்கிச் சஞ்சலமின்றியும் அமைதியாகவும் இருப்பது இரண்டாவது படி. தியானம் மூன்றாவது படி. சமாதி கடைசிப்படி, ஏணியின் அதி உயர்ந்தபடி. அடியில் உள்ள படிகளைத் தாவிக் குதித்துத் தாண்டி மேலான படியை அடைந்துவிட முடியாது; படிப்படியாக ஏறத்தான் வேண்டும். எனவே ஸ்மரண—மனனத்தில் தொடங்கினால் இறுதியாக வந்துறும் பேறு, ஈசுவரலாபமே யாகும்.



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சங்கம் ஆகியவற்றின் உபதலைவர் ஸ்ரீமத் **சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ்** அவர்கள் தென்னாட்டுக்கு விஜயம் செய்கிறார்கள் என்பதை நமது வாசகர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

சுவாமிஜியின் சுற்றுப் பயண தேதியும் இடமும் வருமாறு:

| | | |
|---|---|---|
| மார்ச் | 12—15 | ராஜமகேந்திரம் |
| மார்ச் | 16—23 | சென்னை |
| மார்ச் | 24—30 | உதகமண்டலம் |
| மார்ச் | 30—ஏப்ரல் 2 | மைசூர் |
| ஏப்ரல் | 2— 6 | பெங்களூர் |
| ஏப்ரல் | 7—10 | செக்கந்தராபாத் |




# திருமணத்தின் புனித சடங்குகள்

நல். முருகேச முதலியார்

திருஞானசம்பந்தரின் திருமணத்திற்கு முன் சடங்குகளாக மறையோர்கள் அவருக்குக் காப்பு நாண்சாத்தித் தொண்டர் குழாங்களுடன் ஊர் வலம் செய்து, மணவெழுச்சியாக மணமகனுக்கு ஏற்படுத்திய விதானமண்டபத்திற்கு எழுந்தருளச்செய்தார்கள். அங்கே வைதிக விதிப்படி பிரம்மசரிய நிலை நிறைவுபெற்று கிருகஸ்த நிலை புகு முன்பு செய்யவேண்டியதாகிய சமாவர்த்தன சடங்கையும் உலக வழக்குப்படி செய்து வைத்தார்கள். பிள்ளையாருக்கு—உபநயனம், சமாவர்த்தனம் முதலிய சடங்குகள் மிகையே. எனினும், உலக வழக்கு அனுசரித்தல் பிறருக்கு வழிகாட்டி என்று இவை செய்யப்பெற்றன.

பார்வதி திருமணத்தில் பிரம்மா சடங்குகள் செய்ததுபோல், கற்ற மறையவர்கள் இவ்வினைகளைச் செய்தார்கள். செம்பொன் தட்டிலே செந்நெல் பரப்பி, அரசிலையும், தர்ப்பையும், மலர்களும் சூட்டப்பெற்ற பொற் கலசம் தாபித்தார்கள். பிள்ளையார் மங்கல ஒலிகள் முழங்க புண்ணிய விக்கிரகமாய் மலரமளியின் மேல் அமர்ந்தார். உலகம் இருள் நீங்கிப் பிறவி என்னும் யாப்பை அவிழ்க்க அவதரித்த பிள்ளையாருக்குத் திருமண கங்கணம் சாத்தினர்.

நாயனர் புன்னெறி இருள் அகல அவதரித்ததுபோல், சூரியன் பொலிவுடன் எழுந்து பிரகாசித்தான். இந்தச் சிவத்திருமணத்துக்கு மஞ்சனம் செய்வதுபோல் கதிரவன் கதிரைத் திசைகள் எல்லாம் அணிந்து கொண்டான். ஐந்து பூதங்களும் சிறப்புக் காட்சி அளித்தன. வையத்துள்ளோர்கள் திருமணத்துக்குக் கூடியதால் பூமி பொலிவு காட்டியது. திருமணத்துக்கு மங்கலவொலி எழுப்புவதுபோல் கடல் ஒலித்தது. எல்லா உலகங்களையும் விளங்கச் செய்யும் திருமணத்துக்குத் தாமும் ஒருப்பட்டெழுவன போல் வேதியர்களின் வேதிகைகளில் முத்தீ ஆகுதி இடுமுன்பே வலம்சுழித்து எழுந்தது. வாயுபூதமும் திருமணத்தில் கூடியவர்கள் நறுமலர் மணத்தை ஏந்தி இன்பமாகப் பரப்பிற்று. மணவெழுச்சிக்கு அழகு செய்வதுபோல் வெண் மேகங்கள் ஆகாயத்தில் வெண்துகில் கொடிகளை இயக்குவதுபோல் அசைந்தன. இவ்வாறு ஆகாயமும் (விசும்பும்) தொண்டு செய்தது.

இவ்வாறு பஞ்சபூதங்களும் மணவெழுச்சிக்குச் சிறப்புச்செய்ய, பிள்ளையார் தமது அநுட்டானங்களை முடித்து மூலமாகிய திருத்தோணியில் அமர்ந்துள்ள முதல்வரை சென்று வணங்கித் திருவருள் பெற்றவராய் திருமண முறையில் மேற்செல்வார். சீகாழி மறையவர்களும் அன்பர்களும் சூழ்ந்துவர, வேதகீதம் முழங்க, வெண் முத்துச் சிவிகையில் பிள்ளையார் அமர்ந்து, சீகாழிப் பதியினை வணங்கி மேற்செல்வார். (இதுவே பிள்ளையார் இறுதியாக திருத்தோணியப்பரையும் சீகாழிப்பதியையும் வணங்கியதாகும்.) மற்றவர்களும் அவரவர்களுக்கு ஏற்பட்ட வாகனங்களில் ஏறி, மணவெழுச்சியில் கலந்து கொண்டார்கள். இருமருங்கும் குஞ்சங்களும், குடைகளும், தொங்கல்களும் கவரிகளும் காடுபோல் காணப்பட்டன. நிலத்திலும் ஆகாயத்திலும் மங்கல வாத்தியங்கள் தேவதுந்துபிபோல் எழுந்தன! பிரணவநாதமான சங்கும், மற்றும் தாரையும், சின்னமும் எக்காளமும், தாளமும் குழலும் துணைக்கருவிகளும் ஒலித்தன. மறையவர்களின் வேதகீதமும் மாதர்கள் கூந்தலில் அணிந்த மலர்களில் ரீங்காரம் செய்யும் வண்டுகளின் ஒலியும் விபஞ்சிநாதமும், யாழ்ஒலியும், வீணை கானமும் எழுந்தன.

## மணமகனுக்கு வரவேற்பு

பஞ்சிகைகொண்ட, பூணூல்தரித்த வேதிய சிறுவர்களும் உபாத்திமார்களும் கூடிச்சென்றனர். ஆகமநிலை ஒழுக்கப்படி நாயனர் அருளிச் செய்த பதிகங்களை அன்பினல் ஓதினர்கள். மாதவர்கள் தம்மியல்புக்கொப்ப மவுனமாய் சென்றார்கள். இவ்வகை மண்ணுலகினரொடு, தேவர்களும் மண்ணுலகினரது சாயைபோல் ஆகாயத்தில் அணைந்தார்கள். ஞானசம்பந்தப் பிள்ளையார் தவ அரசாங்கத்தை ஆட்சிபுரிதல்

போல முத்துக்குடையின்கீழ் இப்பிறவியை அறுத்து ஆட்கொள்ளவல்ல இறைவரது திருவடிகளைத் தமது திருவுள்ளத்தில் தியானிப்பவராய் புவனங்களெல்லாம் வாழ்வடையும்படி, நம்பெருமான் எழுந்தருளிய திருநல்லூர் பெருமணத்தினைச் சேர்ந்தருளினர். (இந்தத் தலம் இப்போது ஆச்சாள்புரம் என்று வழங்கப்படுகிறது.)

தவஅர சாள உய்க்குந் தனிக்குடை
நிழற்றச் சாரும்
பவம்அறுத் தாள வல்லார்
பாதம்உள் ளத்துக் கொண்டு
புவனங்கள் வாழ வந்த
பூந்தராய் வேந்தர் போந்து
சிவனமர்ந் துறையும் நல்லூர்த்
திருப்பெரு மணத்தைச் சேர்ந்தார்.

என்பது தெய்வச் சேக்கிழார் பாட்டின் நலமாகும்.

திருநல்லூர் பெருமணத்தின் கோயிலில் உள்ளவர்கள் சிகாழிப்பிள்ளையார் திருமணம் செய்தருளும் பொருட்டு மங்கலம் பெருக எதிர்கொண்டு அழைத்தார்கள். அவர்களுடன் நாயனுர் ஆலகால விஷத்தை மறைத்து, நீலகண்டத்தினை விளங்கப்பெற்ற பெருமானது கோயில் புக்கார். எல்லார்க்கும் நாதனுகிய பெருமானைப் பணிந்து போற்றி பதிகத்தால் பரவி, ஆழ்ந்த காதலுடன் அவர் அருளைப் பெற்று வெளிப்போந்து திருக்கோயில் புறத்திலே ஒரு திருமடத்தினுள் புக்கு வேதியர்கள் வேண்டிக்கொண்டபடி வதுவைக் கோலத்திற்குரிய வேடத்தைப் புனைய ஏற்றுக்கொண்டார்.



# செய்தி

## ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் 142-வது ஜயந்தி 1977 பிப்ரவரி 20ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் பக்தி சிரத்தையுடன் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அதிகாலையிலிருந்து பக்தர்கள் குழுமி தியானம், பஜனை, சாஸ்திர பாராயணம், விசேஷபூஜை, ஹோமம் ஆகிய நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டனர். மாலை ஆரதிக்குப் பிறகு மடத்தில் குழுமியிருந்த பக்தர்களுக்கு, அர்ஜென்டைனுவைச் சேர்ந்த சுவாமி பராத்பரானந்தர் ஸ்ரீராமகிருஷ்ண பகவானின் வாழ்விலிருந்து சில பகுதிகளை வாசித்து ஆங்கிலத்தில் விளக்கம் கூறினர். அடுத்து சுவாமி சித்கனனந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும் என்னும் தலைப்பில் தமிழில் உரை நிகழ்த்தினர். பின்பு சுவாமி தபஸ்யானந்தர், பரமஹம்ச தேவரின் தெய்விக வாழ்க்கைத் தற்கால மக்களுக்குப் புகட்டும் உண்மைகளை விளக்கிப் பேசினர்.

27—2—77 ஞாயிறன்று ஜயந்தி பொது விழா நிகழ்ந்தது. கோவிந்த பட்டாபிஷேகம் என்னும் தலைப்பில் ஸ்ரீ வி. எஸ். வெங்கடரமண ராவ் அவர்கள் இரண்டு மணி நேரம் ஹரிகதா காலக்ஷேபம் நிகழ்த்தினர்.

பின்னர் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழாவை முன்னிட்டு நடைபெற்ற கட்டுரை, பேச்சுப் போட்டிகளில் வெற்றிப்பெற்ற மாணவ மாணவியர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.

அடுத்து ஆங்கிலத்திலும் தமிழிலும்முறையே, மங்களூர் ஸ்ரீ ராமகிருஷ்ண ஆஸ்ரமத்தின் தலைவர் சுவாமி விக்ஞானநந்தரும், சென்னையைச் சேர்ந்த ஸ்ரீ D. ராதாகிருஷ்ணன் அவர்களும் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும் என்னும் தலைப்பில் உரை நிகழ்த்தினர்கள்.

சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் தலைவர் சுவாமி தபஸ்யானந்தஜி அவர்கள் தமது முடிவுரையில் குறிப்பிட்டதன் சாரம் வருமாறு:

இந்த தேசத்திலே எவ்வளவோ மகான்கள் தோன்றியிருக்கிறார்கள். அவதரித்திருக்கிறார்கள். ஆனல் அவர்கள் அவதார காலத்திலே தாங்கள் சொல்லவந்த விஷயங்களைப் போதித்துவிட்டு மறைந்துவிட்டார்கள். பலநூறு வருடங்களுக்குப் பின்னுல் வந்தவர்கள்தான் அந்த உபதேசங்களையும்பிறவற்றையும்எழுதினர்கள். அதனல் அவற்றிலே பல முரண்பாடுகளைக் காண்கிறோம். புத்தர், சங்கரர், ஏசு முதலிய எல்லா அவதார புருஷர்களைப் பற்றிய விபரங்களும் இப்படியே. ஆனல் குருமகராஜ் விஷயம் அப்படியன்று. அவருடைய உபதேசங்களை எல்லாம் ம- அவர்கள் டைரிமூலம் பதிவு செய்து நமக்குக் கொடுத்திருக்கிறார்கள்.

அதுமட்டுமில்லாமல், குருமகராஜ் அவர்களின் உபதேசங்கள் ஒவ்வொன்றும் நம்மைச் செயல் முறையில் கைப்பற்றி அழைத்து இறைவாழ்க்கைக்கு இட்டுச்செல்லும் வகையில் அமைந்துள்ளன.

ஆன்மிக வாழ்க்கையில் ஈடுபட விரும்புகிறவர்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும் வழிகாட்டி உத்வேகமளிக்கும் என்பது உறுதி.



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

(16—3—77 முதல் 15—4—77 வரை)

**ஸ்ரீராம நவமி:**

| | |
|---|---|
| 29–3–77 செவ்வாய்: | மாலை ஆரதிக்குப் பிறகு **ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனம்** |
| 3–4–77 ஞாயிறு: | **ஸ்ரீராம நவமி பொதுக்கூட்டம்**-மாலை 5 மணிக்கு |
| | தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர் |
| | பேசுவோர்: திரு பி. ராமகிருஷ்ணன் (ஆங்கிலம்) |
| | திரு 'அண்ணா' சுப்பிரமண்யம் (தமிழ்) |

ஸ்ரீராமகிருஷ்ண மடம் சங்கம் ஆகியவைகளின் உபதலைவர் **ஸ்ரீமத் சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ்** அவர்கள், மார்ச் 16முதல் 23 வரையிலும் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் தங்கியிருப்பார்கள். அந்நாட்களில் அவர் மாலை ஆரதிக்குப் பிறகு பக்தர்களைச் சந்திப்பார்.

| | |
|---|---|
| **சத் சங்கம்:** ஞாயிறுதோறும்: | மாலை 4 மணி முதல் 8 மணி வரை |
| மாலை 4 முதல் 4.20 வரை | ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (20-3-77& 10-4-77) |
| | ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (27-3-77) |
| மாலை 4.20 முதல் 4.30 வரை | தியானம் |
| மாலை 4.30 முதல் 5.30 வரை | சொற்பொழிவு (தமிழ்) |
| | **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்**—திரு கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (20–3–77) |
| | **ஸ்ரீமத் ராமாயணம்**—டாக்டர். என். வீழிநாதன் (27–3–77) |
| | **ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்** — டாக்டர். டி. எம். பி. மகாதேவன் 10–4–77 |
| மாலை 5.30 முதல் 6.30 வரை | சொற்பொழிவு (ஆங்கிலம்) |
| | **ஸ்ரீமத் பகவத்கீதை** |
| | 1. **ஸ்ரீமத் சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ்** (20–3–77) |
| | 2. சுவாமி தபஸ்யானந்தர் (27–3–77 & 10–4–77) |

**சிறப்புச் சொற்பொழிவுகள்:**

| | |
|---|---|
| சனிக்கிழமை மாலை5. 45மணிக்கு: | 1. **ஸ்ரீமத் ராமாயணம்** — டாக்டர். என். வீழிநாதன் (26–3–77) |
| | 2. **இராமாயணத்தில் ஆராய்ச்சி**—திரு பி. ராமகிருஷ்ணன் (2—4—77) |
| | 3. **கஜேந்திர மோட்சம்** — திரு க. கோதண்டராமன் (9–4–77) |

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்:** (மாலை 5.45)

| | |
|---|---|
| திங்கள்: | (ஆங்கிலம்) **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்** —சுவாமி அம்ருதானந்தர் |
| செவ்வாய்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்** —சுவாமி கபீரானந்தர் |
| புதன்: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பாகவதம்**—சுவாமி கோலோகானந்தர் |
| வியாழன்: | (தமிழ்) **பக்தி யோகம்**—பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| வெள்ளி: | (தமிழ்) **மகாபாரதம்**—திரு 'அண்ணா' சுப்ரமண்யம் |
| வெள்ளி: | (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6.30 சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம் 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி.) |

**விசேஷ தினங்கள்:**

| | |
|---|---|
| | (அந்தர்யோகம்) சாதனை தினம்—ஞாயிறு (23–3–77) |
| | ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனம்: **ஏகாதசி** தினங்களில் ஆரதிக்குப் பிறகு (31–3–77 & 14–4–77) |

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்,

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600 004.**

தொலைபேசி எண்: **71231**

# சமூக மறுமலர்ச்சி

கடந்த 18 மாதங்களில் அமைதி வழியில் சமூகப் பொருளாதாரப் புரட்சி ஏற்பட்டுள்ளது.

★ 1976 நவம்பர் இறுதியில் 71 லட்சம் குடும்பங்கள் இலவச வீட்டுமனை பெற்றன. (நாட்டில் வீட்டுமனை தேவையான குடும்பங்களின் எண்ணிக்கை 113.6 லட்சம்)

★ நில உச்சவரம்பை நிர்ணயித்து, எல்லா மாநில அரசுகளும் சட்டம் இயற்றி அமுல் செய்கின்றன.

★ கிராமக் கடன் ரத்து சட்டத்தை 11 மாநில அரசுகளும் 4 யூனியன் பிரதேச அரசுகளும் இயற்றி, நடவடிக்கை எடுத்து வருகின்றன.
(கடன் வசூல் ஒத்தி உட்பட)

★ 89, 198 கொத்தடிமைத் தொழிலாளர்கள் விடுதலை பெற்றுள்ளனர்.

DAVP 76/885

# ஆசிரியர் ‘அண்ணா’ உரை எழுதிய எங்கள் நூல்கள்

**நாகரத்திலும் தமிழிலும் மூலமும் பதவுரை பொழிப்புரைகளும்**

**விளக்க உரையும் குறிப்புகளும் உள்ளன**

## I. உபநிஷதங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஈச-கேன-கட உபநிஷதங்கள் (அச்சில்) | | |
| ப்ரச்ன-முண்டக-மாண்டுக்ய-ஐதரேய உபநிஷதங்கள் (பக்கம் 172) | 1 | 75 |
| காலிகோ | 2 | 50 |
| தைத்திரீய உபநிஷத்து (பக்கம் 91) | 1 | 50 |
| காலிகோ | 2 | 50 |
| சாந்தோக்ய-ப்ருஹதாரண்யக உபநிஷத்துகளின் ஸாரம், ப்ரஹ்மஸூத்ரத்துடன் (மூன்றுவது பதிப்பு) பக்கம் 320 | 6 | 00 |
| காலிகோ | 9 | 00 |
| மஹாநாராயண உபநிஷத்து (தைத்திரீய நாராயணவல்லி) பக்கம் 146 | 3 | 00 |

## II. பகவத்கீதை

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பகவத்கிதை | 8 | 00 |
| காலிகோ | 9 | 50 |
| ஸ்ரீமத் பகவத்கிதை (பாராயணம்) | 4 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கிதை மூலம் (தமிழ்) பாக்கட் சைஸ் | 2 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கிதை வெண்பா (முத்து ஐயர் இயற்றியது) பக்கம் 223 | 2 | 00 |

## III. வேதாந்த ப்ரகரணம்

| | ரூ. | பை |
|---|---|---|
| விவேகசூடாமணி (பக்கம் 392+XII) | 4 | 25 |
| காலிகோ | 5 | 50 |

## IV. வேதநூல்களும் பிரயோகங்களும்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீருத்ரம்-சமகம் (மஹாந்யாஸத் துடன்-பக்கம் 296) | 4 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம் :— | | |
| தமிழில் ஸ்வரத்துடன் | 6 | 00 |
| நாகரத்தில் ஸ்வரத்துடன் முதல்பாகம் | 2 | 50 |
| ஷை இரண்டாம் பாகம் | 3 | 00 |
| ஸ்ரீதேவீமாஹாத்மியம் | 8 | 00 |
| ஸ்ரீதேவீமாஹாத்மியம் பாராயணம் (தமிழில் மூலம்) | 2 | 00 |
| தேவி ஸ்தோத்திரம் | 2 | 50 |
| உபநயனம் (அச்சில்) | | |
| குருகீதை | 3 | 25 |
| ஜபவிதானம் (பக்கம் 90) | 1 | 00 |
| ஸந்தியாவந்தனம் (பக்கம் 144) | 2 | 00 |
| (தமிழ்) காலிகோ | 4 | 00 |
| ,, ,, (நாகரம்—தமிழ்) | 4 | 00 |
| தேவீஸூக்தங்களும் உபநிஷதங்களும் | 1 | 50 |
| புருஷஸூக்தம் | 2 | 25 |
| பூஜாவிதானம் (தமிழ்) | 5 | 00 |
| ,, காலிகோ | 7 | 00 |
| ,, (நாகரம்) | 4 | 50 |

## V. புராணங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பாகவத ஸாரம்: முதல் பாகம் (ஸ்கந்தம் 1-9) பக்கம் 560 | 10 | 00 |
| ஷை இரண்டாம் பாகம் (ஸ்கந்தம் 10-12) பக்கம் 560 | 12 | 50 |

## VI. ஸ்தோத்ரங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸௌந்தர்யலஹரீ பாஷ்யம் | 5 | 00 |
| காலிகோ | 7 | 00 |
| ஸௌந்தர்யலஹரீ (மூலம்) ,, நாகரம்-தமிழ் | 1 | 50 |
| சிவானந்தலஹரி (பாஷ்யம்) | 4 | 00 |
| ,, (மூலம்) | 1 | 00 |
| சிவ ஸ்தோத்திரங்கள் | 1 | 50 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 5 | 00 |
| காலிகோ | 6 | 50 |
| ,, ,, பாராயணம் | 3 | 00 |
| ,, ,, மூலம் | 1 | 50 |
| ஸ்ரீலலிதா த்ரிசதி பாஷ்யம் பக்கம் 184 | 2 | 50 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்ரம் | 1 | 00 |
| ஸ்ரீவித்யா | 5 | 00 |
| ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 6 | 00 |
| ,, ,, ஸ்தோத்ரம் (பாராயணத்திற்குரியது) பக்கம் 96 | 2 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| பஜகோவிந்தம் | 1 | 00 |
| ஸ்ரீக்ருஷ்ணகர்ணாம்ருதம் (பக்கம் 271) | 4 | 50 |
| அஷ்டோத்தர சத நாமாவளிகள் பக்கம் 60 | 0 | 75 |
| ஆதித்ய ஹ்ருதயம் | 0 | 75 |

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் : : மயிலாப்பூர், சென்னை 600 004**

விலைப் பட்டியல்

## எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் :**

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டு பாகமும்) | 15 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபநிஷதம் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 2 | 75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | 2 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கதை | 0 | 35 |

**சுவாமி விவேகானந்தர்:**

| | ரூ. | பை |
|---|---|---|
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 1 | 25 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) | 11 | 00 |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் | 6 | 00 |
| காலிகோ | 7 | 00 |
| இராஜயோக உரைகள் | 2 | 50 |
| அருளுரை | 1 | 75 |
| கல்வி | 2 | 50 |
| நமது தாய்நாடு | 1 | 00 |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| கருமயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் (அச்சில்) | | |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை | 0 | 25 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 50 |
| எனது குருநாதர் | 1 | 25 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| எனது போர்முறை | 0 | 75 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| விவேகானந்தர் பாதையிலே... | 0 | 50 |
| விவேகானந்தரின் கதை (அச்சில்) | | |

**ஸ்ரீ சாரதாதேவியார்:**

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ சாரதாதேவியார்—அவரது வரலாறும் திருவாக்கும் | 3 | 25 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |

**இதர நூல்கள்:**

| | ரூ. | பை |
|---|---|---|
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| இந்துமத ஸாரம் | 3 | 00 |
| குருதேவர் வாக்கியம் | 1 | 25 |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| நாரதர் கலகம் | 2 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீ ராமநாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |

**முரசு நூல்கள் :**(பாக்கட் சைஸ்)

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| புத்தரின் அற முரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 | 80 |

**சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம்: சுடர்கள் 1—10**

சுவாமி விவேகானந்தர் பேசியவை, எழுதியவை—அனைத்தும் அடங்கிய 10 பகுதிகள்.
ஒவ்வொரு பகுதியும் 500 பக்கங்களுக்குக் குறையாதது.

**சாதா பைண்டு விலை ரூ. 5–00** **காலிகோ பைண்டு ரூ. 6–50**



## ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

**மயிலாப்பூர் : : சென்னை 600004**

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; கூட்டு ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சென்னை 600004